# கண்ணன் பாவைகள்



A. ஸ்ரீராமுலு தேசிகன்

# கண்ணின் பாவைகள்

ஆசிரியர்,

ஸ்ரீவில்லிபுத்தூர் A. ஸ்ரீராமுலு தேசிகன்

ஸ்ரீ கிருஷ்ணா பதிப்பகம்,
P. இராமச்சந்திராபுரம் P. O.
(வழி) பிள்ளையார் குளம் - 626137.
1989.

முதற் பதிப்பு: நவம்பர் 1989
1000 பிரதிகள்



விலை ரூ. 6-00



This book is published with the financial assistance of Thirumalai Tirupathi Devasthanams under the Scheme "Aid to publish religious books.

ஸ்ரீ ஆண்டாள் பிரஸ், 26, மேலரதவீதி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

# பொருளடக்கம்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## நுழைவாயில்

உலகியல் வாழ்வை ஆன்மீக வாழ்வோடு இணைத்தே பேசுகிறான் கீதையில் கண்ணன். இந்து மதமும் அப்படித்தான் பேசுகிறது.

மரத்தின் வளர்ச்சியை பெருக்கிக் காட்டுவது, அதன் கிளைகள். கனிகளின் பெருக்கமும், நெருக்கமும் மிகுதியாகும் பொழுது அதன் கிளைகள் தாமாகவே வளையும். மரம் ஏறும் முயற்சியின்றி இருந்த இடத்திலிருந்தே கனிகளைப் பறிக்கமுடியும். கனிகளை ருசி பார்த்துச் சாப்பிடக் கூடிய நாக்கினைப் பெற்றவன், கிளைகளிலே பேதவுணர்வு கொள்ள மாட்டான்.

'இந்து மதம்' என்ற மரமானது, 'வைணவம்', 'சைவம்' என்ற இருபெருங் கிளைகளாகப் பிரிந்து, 'இந்து தர்மங்கள்' என்ற கனிகளைக் கொடுக்கின்றன. அந்த தர்மங்களை உணர்ந்து வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ்கின்றவர்கள் ஒருவருக்கொருவர் பேதவுணர்வு கொள்ளமாட்டார்கள். ஏனென்றால் அவர்கள், 'இறையவர் அவரவர் விதி வழியடைய நின்றனரே' என்ற ஞானி நம்மாழ்வார் வாக்கினை நினைவிற் கொண்டு செயல்படுபவர்கள்.

'கடல் கிடந்த கனியே' என்று ஆழ்வார்களால் போற்றப்படும் அந்தப் பரம்பொருளை அடைபவர்கள்.

சுருதியோடு பாடலைத் தாளம் போட்டுப் பாடினால், அது சங்கீதமாகும்.

தாளத்தை 'லயம்' என்பர். நன்றாக லயிப்பது என்பது அதன் பொருள். ஒன்று மற்றொன்றோடு நெருக்கமாக இசைவு பெறுவது. திருப்பாவை திருவெம்பாவைப் பாடல்கள் 'சுருதி' யாகும். 'இந்து தர்மங்கள்' பாடல்களாகும். காலம்- தாளங்களாகும்.

திருப்பாவை - திருவெம்பாவைப் பாடல்கள் என்ற சுருதியுடன் 'இந்து தர்மங்கள்' என்ற பாடல் களை 'காலம்' என்ற தாளங்கள் போட்டு 'கண்ணின் பாவைகள்' என்ற பெயர் கொண்ட மேடையில் பாடி யுள்ளேன்.

இங்கிதமாய் ஆன்மீக சிந்தனையோடு வாழ நினைக்கும் ஓர் இந்து குடிமகனுக்கு ஆசார்யன் அருளால் பாடப்பட்ட அடியேனது சங்கீதம், புளகாங்கிதம்.

குறையிருப்பின் மன்னிப்பீர்! நிறையிருப்பின் ஏற்பீர்! ஆதரவளிப்பீர்! இந்து உணர்வைத் தட்டித் துயிலெழுப்பும் சமய விழாக்களில் பங்கேற்பீர்! கால மானது கலாச்சாரத்தை நிராகரிக்காதபடி தன்னைத் தானே புதுப்பித்துக் கொள்வீர்.

அடியேனுடைய சங்கீதத்திற்கு 'அணிந்துரை' என்னும் பொன்னாடை போர்த்திக் கௌரவித்த அறிஞர் பெருமக்கள் புலவர் திலகம் புலவர் கீரன், எம். ஏ., பி. லிட்., திரு. சுகி. சிவம், பி. ஏ., பி.எல்., டாக்டர் சரஸ்வதி ராமநாதன், எம். ஏ., பி. எச்டி., ஆகியோர்களுக்கு இதயங் கனிந்த நன்றியைத் தெரி வித்துக் கொள்கிறேன்.

"என் அப்பனே! குளிர்ந்த வேங்கடமலையில் நிற்பவனே! இலங்கை அழித்தவனே! மராமரம் ஏழும் உருவ ஓர் அம்பைத் தொடுத்த வில்லுடைய வனே! கொத்தாகத் திருத்துழாய் மாலை தரித்த வனே! என்று ஸ்ரீ ராம பிரானே திருவேங்கடமுடைய வனாகக் காட்சியளிக்கிறான் என்று கூறுகிறார் ஸ்ரீ நம்மாழ்வார்.

"எந்தாய்! தண் திருவேங்கடத்துள் நின்றாய்! இலங்கை செற்றாய்! மராமரம்
பைந்தாள் ஏழ் உருவ ஒரு வாளி கோத்த வில்லா!
கொந்தார் தண்ணந் துழாயினாய்!"

மேலும் ஆழ்வார் அந்த இராமபிரானைப் பார்த்து 'அமுதம் போன்ற நீ, என்னுள்ளே உன்னைக்

குழைத்துவிட்டாய்', வானவர் தலைவனே! என்னை விட்டு இனி நீ எங்குப் போகின்றாய்? என்று ஓர் வினாவும் எழுப்புகிறார்.

> ... ... அமுதே! உன்னை என்னுள்ளே குழைத்த எம்
> மைந்தா, வானேறே! இனி எங்குப் போகின்றதே?
> (2.6.9)

திருவேங்கடமலையில் எழுந்தருளியுள்ள அமுதம் போன்ற அந்த இராமபிரான் அடியேன் உள்ளத்தைக் குழைத்தான்; வேட்கையை எழுப்பி சங்கீதம் பாடுவ தற்குண்டான ஆற்றலையும் அளித்தான். பொருள் உதவி செய்வதற்குத் தூண்டுகோலாகவுமானான்.

இந்நூல்அச்சடிப்பதற்குப் பொருளுதவி செய்த திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு அடி யேனது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டுக்கொடுப்பதற்கு முழுப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட ஸ்ரீ ஆண்டாள் அச்சகத்தாருக்கு எனது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியார்க்கடியன்,

ராமமந்திரம், A. ஸ்ரீராமுலு தேசிகன்

புதுச்செந்நெல்குளம்-626137

காமராசர் மாவட்டம்.

PULAVAR KEERAN, B. Litt (Tamil) M. A. (Eng) Phone: 422065.

Plot No. 876, Dr. Ramaswamy Road, K. K. Nagar, West Madras 600078.

10-5-88.

# அணிந்துரை

தற்காலம் மார்கழி மாதம் நடத்தப் பெறும் பாவை நோன்பு சங்க காலத்தில் தைந்நீராடல் என்று அழைக்கப்பெறுவது.

சங்க காலத்திலும் பெண்கள் ஆற்றங்கரை சென்று பதுமையின் வழி தெய்வ வழிபாட்டை மேற் கொண்டனர். கார்த்தியாயினி நோன்பு என்பதும் இதுவே எனக் கலித்தொகையால் உணரலாம்.

தமிழ் மொழியில் அமைந்த முதற்பாவைப் பாடல் சமணர்கள் இயற்றியது. முழுதும் கிடைத் திலது. யாப்பருங்கலவிருத்தியில் ஒரு பாடல் மேற் கோளாக வருகிறது.

தத்துவராய சுவாமிகள் எழுதிய பாவைப் பாடல்கள் இரண்டு. அச்சிட்ட நூலாக பெருவழக் கிற்றாக இல்லை.

ஆண்டாள் நாச்சியார் திருப்பாவையும், மாணிக்கவாசகர் திருவெம்பாவையுமே பெருவழக் காற்றில் இருப்பன.

இவை இரண்டும் கோவிந்தனையும் அண்ணு மலையானையும் பரவிப்புகழ்வது. இந்த இரண்டு நூல்களையும் ஒப்பிட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் அன்பர் ஸ்ரீ அ. ஸ்ரீராமுலுதேசிகன் ஆய்வு செய்துள்ளமை பெரிதும் பாராட்டுக்குரியது.

பாவனை ரூபமே பக்தியின் ஒரு சொரூபம். 'யத்பாவம், தத்பவதி', என்ற முறையே பாவைப் பாடல்கள் பின்பற்றப்படுவதை வெளிப்படுத்தியுள் ளார். பாராட்டற்குரியது. என் வாழ்த்துக்கள்.

அன்பன்,

(ஒம்) **புலவர் கீரன்**

(உண்மையான நகல்)

Suki. Sivam, B.A.,B.L.,
5, Kalappa Kounder Street,
Kattoor, Coimbatore - 641 009.

## அணிந்துரை.

சைவ சார்பில் பிறந்து வைணவ நெறியை மதிக்கும் என்னிடம் வைணவ வாழ்வியலும் சைவ மதிப்பும் கொண்ட உயர்திருவாளர் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீராமுலுதேசிகன் அவர்கள் அணிந்துரை கேட்டது பொருத்தமே.

அவர் இனிய நண்பர், பக்தர், திருமால் நெறியினர். பழைய உரைநூல்களைக் கற்று, உணர்ந்து புதிய வடிவில் தரநினைக்கும் ஆர்வலர். பழமைக்கும் புதுமைக்கும் பாலம் கட்டும் பௌராணிகர்.

இந்து சமயத்தின் இருகண்கள் சைவ வைணவம், அதில் அமைந்த பாவைகள் உண்மையில் கண்ணின் பாவைகள் போலப் பாராட்டத்தக்கவை.

பாவை நூல்களை நுணுகிக் கற்றால் இருசமய இறை உயிர்க்கொள்கை முதல் வாழ்வியல் வகை முறை தெளிவாக அறியலாம். சைவப்பழத்தின் சாறு திருவெம்பாவை. திருமால் நெறியின் மொத்தபிழவே திருப்பாவை.

இவற்றின் ஒருமையையும் உண்மையையும் தேடும் இலக்கியப் பணியை இந்நூலில் தெளிவாகச் செய்திருக்கிறார் ஆசிரியர்.

'நேரிழையாய்' என்று இருபாவை நூற்களும் பெண்களை விளிக்கின்றன. அந்தச் சொல்லழகில் நயங்காணும் பழமையை மாற்றி, பொதுமையான உரை சொல்கிறார்.

ஆம், அறத்தோடு கூடி இல்வாழ்வில் சுகம் காணும் இதயங்களையே நேரிழையீர் என்று ஞானியர்

இருவரும் அழைப்பதாக அர்த்தம் காணுகிறார். பலே! அவர்களுக்குத் தானே இத்தகைய நூல்கள், நோன்புகள் எல்லாமே; நாமும் ஏற்றுக் கொள் கிறோம்.

மழைபெய்கிறது. பொதுவானது மழை. அது பெய்யவேண்டும் என்ற பொதுமை இருபாவைகளின் இதய நோக்கம். அதைப்பாடும் போதுதான் என்ன ரசமான வேறுபாடு.

கார்மேகத்தைக் கண்டதும் காதலன் நினைவு வர, அவனது வில், தோள், என்று உவமித்து கவி மழை பெய்கிறாள் ஆண்டாள். அதேமழை மணி வாசகர் கண்களுக்கு பராசக்தியின் கருணை மழை யாகத் தெரிகிறது.

கார்மழையில் காதல் மழையையும், கருணை மழையையும் கண்டவர்கள் கவி மழையை விளக்கும் கட்டுரை சுவையானது.

குள்ளக்குளிரக்குடைந்து ஆடும் திருவெம் பாவை நீராட்டமும் தீயினில் தூசாகும் திருப் பாவையும் பாவ நீக்க முயற்சியே என்று சாதிக்கிறது இன்னொரு கட்டுரை. நீரும் நெருப்பும் தூய்மை யாக்கும் கருவிகள் தானே? சங்கு ஊதுவது சடங்கு என்னும் சமூக அமைப்பில் பற்று நீக்கவே அது அழைப்பு விடுக்கிறது என்கிறது இன்னொரு கட்டுரை. அதற்கான கதைகள் இலக்கிய விளக்கங் கள் புராண மேற்கோள்கள் சிறப்பு அம்சம்.

சங்கொலி வானவிடியலின் வறட்டு அடை யாளம் அன்று, வாழ்க்கை விடியலின் அறைகூவல் என்கிறார் ஆசிரியர். ஆமோதிக்கிறோம். அடுத்த கட்டுரை உயிர்களை உறக்கத்தினின்று எழுப்பும் உயிர்க்கட்டுரை, உயர்கட்டுரை.

உயிர்க்கும் இறைவனுக்கும் உள்ள தொடர் பினை விளக்கும் ஏழாவது கட்டுரை எழுபிறப்பின்

வாடுவோர்க்கு ஏற்ற கட்டுரை. ஜீவபரமான்மா தொடர்பு ஒழிக்க ஒழியாதது. அவனைப் பற்ற அவனே வழி. அவன் மூலம் இன்னொன்றைப் பெற நினைப்பது முட்டாள்தனம். அந்த மற்றைய காமங் களை மாற்ற வேண்டும். ஞானப்பனுவலை நன் றாகவே விளக்குகிறது அந்த கட்டுரை,

சமய சங்கீதத்தின் ஏழு ஸ்வரங்களாய் ஏழு கட்டுரைகள். ஏழ்பிறவியை நீக்கவல்ல ஏழுமலை யானை நினைவூட்டுவது போல் ஏழு கட்டுரைகள். வாழ்த்துகிறேன். ஆசிரியரைப் பாராட்டுகிறேன்.

அன்புடன்,
(ஒம்) சுகி. சிவம்

(உண்மை நகல்)

டாக்டர் சரசுவதி இராமநாதன், M.A.,Ph.D.,

தங்கல்: ஸ்ரீவில்லிபுத்தூர்.
12—3—88.

## அணிந்துரை

இந்து சமயமென்னும் முகத்தின் இருக்கைகள் சைவமும் வைணவமும். அதன் இரு கண்மணிகளே திவ்யப்பிரபந்தமும், திருமுறைகளும். அவற்றின் இருபாவைகளே திருப்பாவையும் திருவெம்பாவை யும். அவற்றின் தத்துவ நுட்பங்களை ஸ்ரீவில்லி புத்தூர் ஸ்ரீராமுலுதேசிகன் அவர்கள் வண்ணமுறத் தந்துள்ளார். பழுத்த மனத்து அடியவர் இவர். பாங்கான ஆசிரியர். நல்ல பேச்சாளர். வீறுசொல் எழுதும் எழுத்தாளர்.

மார்கழி = மால்+கழி என்று பிரித்து இவர் காட்டும் பொருள் நுட்பம் இதுவரை யார் கண்டார் கள்? 'சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப் பூவே, - உட்பொருளை இரண்டாவது கட்டுரை நய மாகக் காட்டுகிறது. நேரிழையால் நேரிழையீர் என்று மணிவாசகர் அழைப்பதன் அழகையும் உட் பொருள் காட்டி உயர்வாக விளக்குகிறார். மூன்றா வது கட்டுரை, பகவானின் ஆயுதங்கள் பகைவருக்கு அச்சம் தருவன. பகையணங்கு ஆழி என்றார் போல அவையே பக்தருக்கு திவ்ய ஆபரணங்களாய் காட்சி தரும் மழைப்பாட்டுகளான திருப்பாட்டுகளை மிகுந்த சமரச உணர்வோடு எடுத்துரைக்கும் அற்புத கட்டுரை இது. வாயினால் பாடி, மனத்தினால் சிந்தித்து போய பிழையும் புகுதருவான் நின்றனவும் போக்கு வது குறித்தது நான்காவது கட்டுரை.

ஐந்தாவது கட்டுரையில், இன்று இந்து சமயத் தில் நிலவிவரும் சாதிப் பிணக்குகள் நீக்க வழிகாட்டு கிறார். சமுதாயத்தின் உறக்கத்தைப் போக்கக் குர லெழுப்புகிறார் ஆறாம் கட்டுரையில். ஏழாவது கட்டுரை ஆண்டான் அடியாருக்குமிடையேயுள்ள நீக்கமில்லா உறவினை உணரும் மெய்யறிவினைத் தெளிவாகக் காட்டுகிறது. மொத்தத்தில் திறமான புலமை, கூர்ந்தறியும் ஆற்றல், சமயத்தைச் சமுதாய நலனுக்கு இணைக்கும் உளப்பாங்கு, சமரசப் போக்கு வடமொழிப் பயிற்சி, தேர்ந்த ஞானம், ஆழ்ந்த பக்தி அனைத்தையும் காட்டி நிற்கும் நல்ல மணிமாலை இது. பக்தர் யாவரும் போற்றிப்பரவ வேண்டியது கடமை.

வாழ்க ஸ்ரீ ராமுலு தேசிகன்.

வளர்க இவரது சமய சமுதாயப் பணி.

(ஒம்) **சரசுவதி இராமநாதன்**

(உண்மை நகல்)

# 1. மார்கழி

மால் + கழி = மார்கழி என அமையும். மயக்கத்தைக் கழி என்பது பொருள். உடலே ஆன்மா என்ற மயக்கத்தைக் கழி, பரம்பொருளுக்கு அடிமைப் பட்ட ஆத்மாவைத் தனக்கு அடிமையாக நினைக்கும் அறியாமையைக் கழி. ஒரு குணத்தை மற்றொரு குணமாக அறியும் விபரீத அறிவைக் கழி, மறதியைக் கழி. மனதில் சுக்ல பட்ச சந்திரனைப் போல் அன்பு, சக்தி, உற்சாகம், பாரோபகார சிந்தை, தயை முதலிய தூய உணர்ச்சிகளை வளர விடாமல் தடுக்கும் உடற் பற்றினைக் கழி, கழிக்கும் மார்க்கத்தினைக் காட்டுவதே இந்து தர்ம நூல்களாகும்.

ஒன்றைப்பற்றி அறியாமல் அதிலுள்ள இன்பத்தை உணர முடியாது. இன்பத்தை உணராத நிலையில் அதில் மேலும் மேலும் விருப்பம் ஏற்படாது. விருப்பம் ஏற்படாத நிலையில் அதனை அடையும் உபாயத்தில் இறங்க முடியாது.

'தர்மத்தின் உண்மையான நிலை குகையில் அடைக்கப்பட்டிருக்கிறது'. அதனைச் சாத்திரத்தினால் அறிந்து கொள்ள முடியாது. அந்நிலையில் அதனை வாழ்க்கையில் கடைப்பிடிக்கவும் இயலாது. பெரியோர்கள் சென்ற வழியில் செல்வதுதான் சிறந்த தர்மமாகும், என்று கூறுகிறது சாஸ்திரம் (தர்மஸ்ய தத்துவம் நிஹிதம் குஹாயாம் ம்ஹா ஜநோ யேந கத: ஸ பந்தா)

ஆண்டாள் தர்ம வழியில் வாழ்ந்து இறைவன் அருளால் தான்கண்ட உண்மைகளைத் திருப்பாவைப் பாசுரங்களாக வெளியிட்டாள்.

மாணிக்கவாசகர் தாம் கண்ட உண்மைகளைத் திருவெம்பாவைப் பாசுரங்களாக வெளியிட்டார்.

பாவை என்றால் பதுமை என்று பொருள். 'திரு' என்பது இலட்சுமியின் அருளைக் குறிக்கும். இலட்சுமியும் விரும்பும் செல்வத்தைக் குறிக்கும். அச்செல்வம் எப்பொழுது கிடைக்கும்? பகவானின் வீர்யம், கல்யாண குணங்களைப் பாடி சிந்திக்கும் பொழுது அறிவுடைய ஆன்மாவிற்கு வீர்யம், கல் யாண குணங்கள் ஏற்படும். அப்பொழுது பகவா னைப் பிரிந்தமையால் உண்டான் துன்பத்தை நீக்கி மகிழ்ச்சிக் கடலில் மூழ்குவான் என்று ஆண்டாள் 'திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி வருத்த மும் தீர்ந்து மகிழ்ந்து ... ...' என்று கூறுகிறாள். பகவானுடைய குணங்களைச் சிந்திக்கும் பேறு கிடைக்கும் பொழுது, இலட்சுமி விரும்பும் செல்வம் கிடைக்கும்.

'திரு' என்பது இலட்சுமியின் அருளைக் குறிப்ப தால் தொண்டு செய்யும் உள்ளத்தினைக் குறிப்பிடும். இராமபிரான் பின்னால் காட்டிற்குச் சென்று அவனுக்குத் தொண்டாற்றும் இலட்சுமணப் பெரு மாளை, 'லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம் பந்ந:' அதாவது இலட்சுமணன் இலட்சுமியைச் சம்பாதித்துக் கொண் டான் என்கிறார்', வால்மீகி பகவான். இதன் மூலம் 'திரு' என்பது தொண்டு செய்யும் உள்ளத்தினைக் குறிப்பிடுவதை உணரலாம். பாவை என்பது பதுமை யினைக் குறிக்கும். அழகுணர்வை காட்டுவது பதுமை எனப்படும். 'திருப்பாவை' என்ற சொல் அழகான தொண்டுள்ள இயல்பினைக் காட்டும்.

எந்த இடத்திலும், எந்த நேரத்திலும், எந்த முறையிலும் வைத்தாலும் பதுமையானது தனது அழகினைக் குறைவின்றிக் காட்டும், அதுபோல் உண்மையான தொண்டன் நெருக்கடியான சூழ்நிலை

களிலும் எந்த இடத்திலும், எந்த முறையில் இருந்த போதிலும் தன் குண அழகினைக் குறைவின்றிச் செயல்கள் மூலம் காட்டுவான்.

இல்லாத குற்றத்தைத் தன் மீது சுமத்தப்படும் பொழுதும் கூட அதனைப் பூர்ண திருப்தியுடன் ஏற்பதே உண்மைத் தொண்டனின் இயல்பாகும்.

கைகேயீ இராமபிரானைக் காட்டிற்கு அனுப்பினாள். 'என்னுடைய பாபமே என் தாய் செய்த குற்றத்திற்குக் காரணம் என்று தன்னை அக்குற்றத்திற்குப் பொறுப்பாளியாக்கிக் கொண்டார் பரதாழ்வார். (மத் பாபமே வாத்ர நிமித்த மாஸீத்)

ஆண்டாள் ஈடுபட்டாள் அந்த பரதாழ்வாரின் குணவழகில், அதனைக் குறிப்புணர்த்தினாள், திருப்பாவைப் பதினைந்தாவது பாடலில்.

துயிலெழுப்பும் பெண்கள் உள்ளே துயில் நீங்கிய தங்கள் தோழிப் பெண்ணிடம், 'உன் கட்டுக் கதைகள் எங்களுக்குத் தெரியும்; உன் வாய் வீச்சினையும் அறிவோம், வா, சீக்கிரம் புறப்படு', என்றார்கள். அதற்கு உள்ளிருப்பவள், 'இப்படி எதிர்வாதம் செய்யும் நீங்களே வாய் வன்மையுடையவர்கள்,' என்று கூறிவிட்டாள். கூறிய பின்பு சிந்தித்தாள். தன்னிடம் குற்றமில்லாவிடினும், உத்தமமான பாகவதர்கள் வாக்கினை மறுத்துப் பேசி பாகவதபசாரத்திற்குத் தான் ஆளாகிவிடக் கூடாதென்பதை உணர்ந்தாள். உடனே அவர்களிடம், 'நீங்கள் கூறியபடி நானே வாய் வன்மையுடையவளாக இருந்து விடுகிறேன்,' என்று கூறி மன்னிக்கப் பிரார்த்தித்துக் கொண்டாள். திருப்பாவை முப்பது பாசுரங்களின் சாரமான கருத்தினைத் தெரிவிக்கும் பதினைந்தாவது பாடலிலுள்ள கீழே குறிப்பிட்டிருக்கும் வரிகள் மேன்மையுடன்

வையத்துள் வாழ்வாங்கு வாழ நினைக்கும் மானுட உள்ளத்தினை அழகு படுத்தும் கோலங்களாகும்.

'வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானே தானாயிடுக.'

மாலைக்கு முகப்புப்போல், சேலைக்கு முந்தானை போல், சோலைக்கு மண்டபம் போல், பள்ளியெழுச்சிப் பாடல்களுக்கெலாம் சிறப்புத்தரும் சிகரமாக அமைந்துள்ள பாடல் திருப்பாவைப் பதினைந்தாவது பாடல். அறியாமை என்னும் அங்கியை அணிந்துகொண்டு அறிவிலிகள் என்னும் களைகளைச் சாகுபடி செய்யும் நாட்டுப் பற்றற்ற நடிப்புச் சுதேசிகளை அறுவடை செய்ய, அறிவுடைய ஆன்மாக்களுக்கு திருப்பள்ளி எழுச்சி பாடும் பாடல் ,திருப்பாவைப் பதினைந்தாவது பாடல்.

ஒரு பலனையும் விரும்பாமல் இறைவனிடம் பக்தி செய்து, ஆன்மாவின் மேன்மைக்கு அந்த இறைவனே உபாயமாவான் என்று அறிவிலே தெளிவடைந்தவன் பாகவதன். வாழும் நாட்களில் அவனுடைய வருணாசிரம தர்மத்திற்குச் சேர்ந்த கர்மத்தை புகவத் கைங்கர்ய ரூபமாக, இறைவனுடைய இன்பத்திற்காகச் செய்கிறவன் பாகவதன். இப்படி வாழும் பாகவதனுடைய மேன்மை இறைவனின் மேன்மையைக் காட்டிலும் மேம்பட்டது. அப்படிப்பட்ட பாகவத லட்சணத்தைக் கூறும் பாடல் திருப்பாவைப் பதினைந்தாவது பாடல். இப்பாடலை 'திருப்பாவை என்பது இப்பாட்டிறே' என்று முப்பது பாடல்களுக்கு வியாக்கியானம்(விளக்கவுரை) எழுதிய மணவாளப் பெருமாள் நாயனார் என்ற ஆசாரிய புருஷர் கூறுவர். அழகான தொண்டுள்ளத்தின் இயல்பே 'திருப்பாவை' என்ற சொல் மூலம் உணர்த்தப்படுகிறது என்பதை நுணுக்கமாக கற்றால் உணரமுடியும்.

அறிவு படைத்த ஆன்மாக்களுக்கு அழகு தரும் ஆபரணமாம் தொண்டு நெறியின் இயல்புகளை மாலையாகக் கோர்த்து, அம்மாலைக்குச் 'சங்கத் தமிழ் மாலை', என்று பெயரிட்டாள் ஆண்டாள். மக்கள் சங்கம் சங்கமாகச் சேர்ந்து அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை மிகுதியினால் அப் பெயரிட்டாள்.

பக்தி உணர்வில் மூன்று நிலைகள் உண்டு. அவை பர பக்தி, பர ஞானம், பரம பக்தி என்பவை யாகும். பகவானை நேரில் காண வேண்டுமென்ற ஆவல் பரபக்தி. அவனை நேரில் காணும் நிலை பரஞானம். பின்பு மேலும் மேலும் இடைவிடாது அவனை அனுபவிக்க வேண்டும் என்னும் ஆவல் உணர்வே பரமபக்தி எனப்படும். அவனுடைய அனுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன் போல் மூச்சு அடங்கும்படி இருக்கும் உச்ச நிலை பரமபக்தி நிலை. அந்நிலையிலிருந்து ஆண்டாள் பாடிய பாடல்கள் திருப்பாவையாகும், இவை அறி வுடைய ஆன்மா செய்த பாதகங்கள் தீர்க்கும்; பரம னடி காட்டும்; வேதம் அனைத்துக்கும் வித்தாகும்.

திருவெம்பாவைப் பாடல்களில் ஒவ்வொரு பாட்டு இறுதியிலும் 'எம்பாவாய்' என்று முடி கின்றது. எம்பாவை போல்வாளே என்பது பொருள். 'திரு' என்பது அடைமொழி.

பக்குவம் முதிர்ந்த அறிவுடைய ஆன்மா மல இருளில் அதாவது காம குரோத லோபம் என்ற நரகத்தின் வாயிலில் அழுந்திக் கிடக்கும் பக்குவம் பெறாத அறிவில்லாத ஆன்மாவை எழுப்பி, இறை வனது அருள் நீரில் திளைப்பதற்கு அழைத்துச் செல்வதாகக் கூறும் உண்மைப் பொருள்கள் அடங் கிய பாடல்கள் திருவெம்பாவைப் பாடல்கள்.

'மலவிருள் உற்று உறங்காமல் மன்னு பரி பாகரருள் செலமுழுக வருகவெனச் செப்பல் திருவெம்பாவை' என்று கூறுகிறது திருப்பெருந் துறைப் புராணம்.

அறிவுடைய ஆன்மா உய்யும் வழியை மனத்திலே சிந்தித்து உவகையுடன் செய்ய வேண்டிய காரியங்களைக் கேட்க மாட்டீர்களா? என்று வையகத்து மக்களிடம் அங்கலாய்க்கிறாள் ஆண்டாள். (திருப்பாவை 2)

திருப்பாவைப் பாடல்களுடைய கருத்துக்களைக் கவனமுடன் கேட்டு ஆசார்யனருளால் வாழ்வில் கடைபிடிக்கும் பேறு கிடைத்துவிட்டால் திருவெம்பாவைப் பாடல் 11ல் கூறியபடி 'துன்பத்தினின்றும் நீங்கி இன்பத்தைப் பெறுபவர்கள், அவற்றைப் பெறும் வகைகளில் எல்லாம் அவர்களைப் போல் நாமும் படிப்படியாகப் பெற்றுவிட்டோம்' என்ற பெருமிதத்தில் வாழமுடியும்.

எனவே மார்கழி மாதத்தில் பற்றுக்களை விடுவதற்குப் பற்றற்றான் பற்றினைப் பற்ற திருப்பாவை-திருவெம்பாவைப் பாடல்களை வாயினால் பாடி மனத்தினால் சிந்திப்போம். உணவை அசைபோடும் பசுவைப் போல் அப்பாடல்களில் பொதிந்துள்ள உண்மைப் பொருள்களை அடிக்கடி நினைவிற்குக் கொண்டுவந்து நிறுத்துவோம். ஞானாசிரியன் அருளால் வாழ்க்கையில் கடைப்பிடிக்க முயல்வோம்.

கண்ணின் பாவைகளைப் போல் திருப்பாவைப் பாடல்களை வைணவப் பெருமக்களும், திருவெம் பாடல்களை சைவப் பெருமக்களும் போற்றி இந்து மத எழுச்சி உணர்வினை வளர்ப்போம். அவ்வுணர்வில் தேசீய ஒருமைப் பாட்டுணர்வைப் பேணுவோம்.

## 2. நேரிழையார் யார்?

நேரிழையார் என்றால் நேர்மையான பண்புகளை யுடையவர்கள் என்று பொருள். 'இழை' என்பதற்கு உருவகத்தால் குணம் என்று பொருள் கொள்ள வேண்டும். ''நவையுறு குணங்களென்றும் பூணெ லாம் பொறுத்த மேனி'' என்று கூறுவான் கம்பன்.

சமயச் சின்னங்கள் அணியும் பொழுதெல்லாம் அவைகளின் உட்கருத்தைச் சிந்தனை செய்ய வேண்டும். அப்பொழுதுதான் நற்குணங்கள் உண் டாகும் உடலுக்கு அணியும் ஆபரணங்களைப் பற்றியும், அணிய வேண்டியதின் காரணங்களைப் பற்றியும் சிந்திக்க வேண்டும். ஆபரணங்கள் உடல் அழகை மட்டும் பேணுவதற்காக அணிவதில்லை, குண அழகையும் பேணுவதற்கு அணியப்படுகிற தென்ற உண்மையினை உணரமுடியும்.

வளையல்கள் மூலம் கைகூப்பிச் செய்யும் வழி பாட்டினைச் சிந்திக்க வேண்டும். தோள்களில் அணியும் தோள்வளை மூலம் ஆசாரியனால் பதித்த சங்கு சக்கரங்களைச் சிந்திக்க வேண்டும். அவை களின் மூலம் அறிவுடைய ஆன்மா இறைவனுக்கு உரியவன் என்ற எண்ணம் மனதில் வேரூன்றி நிற் கும். காதுகளில் அணியும் தோடுகளின் மூலம் பெறுவது இதிகாச புராணங்களில் கேட்ட அறநெறி கள், பாதங்களில் அணியும் பாடகம் என்ற ஆபரணம் மூலம் பெறுவது - அருள்மிகு திருக்கோயில்கள்: காலட்சேபங்கள், இலக்கியச் சொற்பொழிவுகள் நடைபெறுமிடங்களுக்குச் செல்லும் திருவுள்ளம். ஆத்மாவிற்கு நற் பண்புகள் உண்டாக்குவதற்காக இவைகள் போன்ற இன்னும் பல அணிகலன்கள் அணிவோம் என்கிறாள் ஆண்டாள்.

'சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்'
(திருப்பாவை 27)

உடலழகும் ஆன்ம அழகும் ஒருங்கே பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழவேண்டும். அதற்கு இறைவனது இரண்டு திருவடிகளில் ஒன்றைப் பொன்னாகவும் மற்றொன்றைத் தாமரையாகவும் பாவனை செய்து வழிபாடு செய்யவேண்டும். செய்தால் நாளடைவில் அந்த திருவடிகளைப் போற்றக் கூடிய பொருளாகக் கருதும் உள்ளத்தினைப் பெற்று விடலாம் என்று அறிவுரை அளிக்கிறாள் ஆண்டாள். 'பொற்றாமரையடியே போற்றும் பொருள்' (திருப்பாவை 29)

பொன்னின் இயல்பானது அடிபடும் பொழுதெல்லாம் தன் ஒளியைக் குறைவின்றி காட்டும். அதுபோல் அறிவுடைய ஆன்மா துன்பங்களில் அடிபடும் பொழுதெல்லாம் தன் அறிவொளியைச் செயல் மூலம் குறைவின்றிக் காட்டும். பொன்னால் செய்யப் பட்ட நகைகளை அணிவதில் சிந்தனை செய்தால் அவனது அறிவொளி மங்குவதற்கு வாய்ப்பில்லை. தாமரையின் இயல்பானது தன் மீது விழுந்த நீர்த் துளிகளை ஒட்டிக்கொள்ளாது. அதுபோல் அறிவுடைய ஆன்மா தன்னுடைய உள்ளத்தினை இன்ப துன்பங்களில் ஒட்டிக்கொள்ள அனுமதிக்கமாட்டான். உடலுக்கு அணியும் ஆபரணங்களில் பற்றுவைக்க மாட்டான்.

இறந்த தன் மகன் இந்திரஜித்திற்கு நீர்க்கடன் செலுத்தும் இராவணன் சீதாப் பிராட்டியை 'நேரிழை' என்று விளித்ததாகக் கம்பன் கூறுவான்;

'... ... ... நேரிழை ஒருத்தி நீரால்எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம், ஏங்கி ஏங்கி உனக்கு நான் செய்வதானேன்' என்னின் யார் உலகத்து உள்ளார்?''

இயல்போடு இல்வாழ்க்கை வாழ்பவர்களுக்கு இறைவன் மனமுவந்து வந்து அவர்களிடம் தன் திருவடிகளை அளிக்கிறான். அவர்களை நேரிழை யார்கள் என்று ஆண்டாளும் மாணிக்கவாசகரும் அழைக்கிறார்கள்.

அறிவுடைய ஆன்மாக்கள் அறியாமல் அவர் களுடைய தலைகளில் தனது திருவடியை வைத்துக் காப்பாற்றினான் இறைவன். மாபலி கொடுத்த தானத்தைப் பெறுவதற்கு உலகத்தைத் அளந்த பொழுது பக்தர்களுடைய முயற்சியில்லாமலே தனது திருவடியை அளித்து அந்த ஆன்மாக்களைக் காப் பாற்றினான். அவனுக்கு உத்தமன் என்ற பட்டம் கொடுத்து, 'ஓங்கி உலகளந்த உத்தமன்,' என்று போற்றுகிருள் ஆண்டாள்.

இப் பூவுலகில் இறைவன் ஏன் கோயிலில் வந்து எழுந்தருளியிருக்கிருன்?

'தேவர்கள் வழிபடுவதற்கு நாணுகின்ற தாமரை மலர் போன்ற திருவடிகளைப் பூலோகத்தாருக்குக் கொடுத்து அவர்களைக் காப்பாற்றுவதற்காக ஒளி உருவஞன இறைவன் கோயிலில் வந்து எழுந்தருளி யிருக்கிறான்,' என்கிறார் மாணிக்கவாசகர்.

(திருவெம்பாவை 2)

'... ... ... விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் ... ... ...'

விண்ணோர்கள் பயன் கருதி வழிபடுவார்கள். ஆதலால் அவர்கள் இறைவன் திருவடியைப் புகழும் பொழுது நாணத்துடன் புகழ்வார்கள். தேவர்களை விட பூவுலக மக்கள் நற்பண்புடையவர்கள். "விண்ணுளாரினும் சீரியர் மண்ணுளார்," என்பது நம்மாழ்வார் திருவுள்ளம். தேவர்கள் தலைவன்

இந்திரன், யமன், வருணன் முதலியோர்களுக்கு தமயந்தி வாழும் இந்த மண்ணுலகமே சுவர்க்கலோக மாகத் தென்பட்டது. மனிதனை நளனுடைய வேடத்தையே தேவர்கள் விரும்பி மேற்கொண்டார் கள் என்கிருன் மகாகவி ஸ்ரீ ஹர்ஷன். ஆன்மாவினை அழகுபடுத்தும் அணிகலன்கள் ஒளிவிட்டுப் பிரகாசிக் கும் இடம் இந்த மண்ணுலகமேயாகும். பாம்பு குடித்த முட்டை மாதிரி உருவ அழகில் திகழாமல் உள்ளத்தில் உண்மை அழகு ஏற்றுமிடம் இந்த மண் ணுலகமே.

கிடைத்தற்கரிய அந்த இறைவனுடைய மலர்ப் பாதங்களால் கிடைக்கும் பேற்றினை அறிவுடைய ஆன்மா தனது தவபலத்தினாலோ அல்லது வேறு விதமான சுயமுயற்சிகளினாலோ பெற்றால், அந்தப் பேறு நிலைத்து நிற்காது. தவ வலிமையினால் சுவர்க்கலோக இன்பத்தினைப் பெற்றார்கள் யயாதி யும், நகுடனும். ஆனால் பெற்ற இன்பம் நிலைக்க வில்லையே? இல்லற இன்பத்தில் இனிமை கண்டு வாழும் இந்த அறிவுடைய ஆன்மா செய்த குன் றனைய குற்றங்களைத் தன்னுடைய கருணை உள்ளத்தால் மன்னித்து அவைகளையே குணங் களாகக் கொண்டுள்ளான். அந்த இறைவன் மன முவந்து அவனே இவனைத் தேடிவந்து தனது மலர்ப்பாதங்களைப் பக்தர்களுக்குத் தந்தருளினு லொழிய நிலைத்த மதியில் நின்று ஆன்மவொளியில் பிரகாசிக்கமாட்டான். இறைவனே வந்து தனது மலர்ப் பாதங்களைப் பக்தர்களுக்குத் தந்தருளு கிறான் என்ற கருத்தினை, 'மலர்ப் பாதம் தந்தருள வந்தருளுந் தேசன், சிவலோகன்', என்ற அடியில் திருவெம்பாவை குறிப்புணர்த்துகிறது. 'சிறப்புப் பொருந்திய மிகவும் நுண்ணிய ஆபரணங்களை அணிந்தவர்களே! சிறப்பு பெருகி நிற்கும் திருவாய்ப் பாடியின் அருட் செல்வமும் பொருட் செல்வமும் இளமையும் பொருந்தியுள்ள பருவப் பெண்களே!

இது மார்கழி மாதம், சந்திரன் பூரண பொலிவு பெற்றுத் துலங்கும் நல்ல நாள். பாவை நோன்பை முன்னிட்டு நீராட விருப்பமுள்ளவர்கள் வருவீர் களாக,' என்கிறாள் ஆண்டாள்.

> ''மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்
> நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்,
> சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்.''

சிறிதும் புத்தியில்லாத மாடு மேய்க்கும் குலத் தில் பிறந்த பெண்களை நேர்மையான குணங்களை யுடையவர்கள் என்று விளிக்கிறாள் ஆண்டாள். ''அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தவரை, பூரண சந்திரன் போன்ற முகம் வாய்ந்தவர்களென்றும் சிறந்த ஆபரணங்களை அதாவது நற்பண்புகளை யுடைய கோபகன்னிகைகளென்றும் விளிக்கிறாள் 'திங்கள் திருமுகத்துச் சேயிழையார்' என்று கூறு கிறாள் ஆண்டாள். (திருப்பாவை 3)

அறிவில்லாதவர்கள் நேரிழையார்களானார்கள்; சேயிழையார்களானார்கள்; அதாவது நற்பண்புகள் உடையவர்களானார்கள்.

உன்னை (இறைவனை) எங்களுடன் பிறந்தவன் போல் பாவிக்கும் புண்ணியத்தை அடைந்தோம், என்று ஆய்ப் பெண்கள் வாக்காக ஆண்டாள், ''உன்றன்னைப் பிறவிப் பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்'' என்று கூறுகிறாள்.

அறிவில்லாத ஆய்ப்பெண்கள் இதயத்தில் இறைவனை நிறுத்திப் பக்தியில் ஈடுபட்டமையால் நேரிழையார்களாகத் திகழ்ந்தார்கள்.

மானுட உடலில் அறிவுக்கும் புலன்களுக்கும் போராட்டம் நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. முடிவில் புலன்களே வெற்றியடைகிறது. அதாவது

அறிவை செயலற்றதாகச் செய்து விடுகிறது. அந் நிலையில் அறிவுடைய ஆன்மா குற்றவாளியா கிறான். அறிவு எங்கே போய்விட்டது? என்று அருகி லிருப்பவன் கேட்கிறான்? எங்கும் போகவில்லை. மனமும் புலன்களும் சேர்ந்து அறிவைச் செயலில் ஈடுபடுத்தவில்லை. ஆன்றோர்கள் மனத்தை அடக்கு. 'மனம் போனபோக்கெல்லாம் போக வேண்டாமென்று' கூறினார்கள். மன அடக்கம், புலனடக்கம் மூலம் பண்புகள் வளரும். பண்பு களிருக்குமிடத்தில் அறிவுச்சுடர் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அறிவுள்ள இடத்தில் புலனடக்கம் இல்லாவிட்டால் பண்புகளிருக்காது. 'அறிவுடை யார் எல்லாம் உடையார்' என்று கூறிய வள்ளுவர் அறிவுடையவர்களால் உலகம் இயக்கப்படுகின்றது என்று கூறவில்லை. பண்புடையவர்களால் இயக்கப் படுகிறதென்ற பொருளில் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்கிறார். பக்தியின் மூலம் மனஅடக்கம், அதன் மூலம் பண்புகள் ஏற்படும். வீட்டு வேலைக் காரி ரூ. 1000க்கு புடவை பெற்றுள்ளாள் என்றால் எஜமானியுடைய புடவை விலையினை குறைத்து மதிப்பிட முடியாது. அதுபோல் இறைவனிடம் 'உன்றன்னைப் பிறவிப் பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்', என்று கூறிய பக்தியில் தோய்ந்த நிலைத்த மதியினைப் பெற்ற ஆய்ப் பெண்களுடைய அறிவினைக் குறைத்து மதிப்பிட முடியாது. எனவே அவர்களை நேரிழையாரென்றும் சேயிழை யாரென்றும் ஆண்டாள் குறிப்பிட்டாள்.

'சிறந்த அணிகலன்களை அணிந்தவளே! இரவும் பகலும் நாம் பேசும்பொழுது, என் அன்பு மேலான ஒளிப் பிழம்பாய்த் திகழும் அந்த இறை வனுக்கே என்று கூறுவாய்; இப்பொழுது அருமை யாகிய படுக்கைக்கே அன்பு வைத்தனையே' என்று இல்லற வாழ்க்கையில் அழுந்திக் கிடக்கும் மனத் தெளிவு பெறாத ஒரு பெண்ணை மனத்தெளிவு

பெற்ற மற்றொரு பெண் எழுப்புவதாக திருவெம் பாவையில் கூறுகிறார் மாணிக்கவாசகர்.

''பாசம் பரஞ்சோதிக்கு என்பாய் இராப்பகல் நாம்
பேசும் போது; எப்போது இப்போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ...? நேரிழையாய்......?

எல்லா ஜீவன்மாக்களையும் இயக்கும் சக்தி அந்த ஜீவான்மாக்களிலுள்ள ஆன்மீக சக்தி (ஸர்வ பூத தமனி). அந்த சக்தியானது, போராடும் பலம் இருந்தும் புலன்களால் தோற்கடிக்கப்பட்டு அமளி யில் கிடக்கும் சக்தியினை (பலப்பிரதமனியை) எழுப்புகிறது. நேரிழையார்கள் அதாவது சிறப்பு பொருந்திய ஆன்மாவிற்கு அழகு செய்யும் நற்பண்பு பெற்றவர்கள் தனித்து இறைவழிபாடு செய்யக் கூடாது. கூட்டு வழிபாடு செய்ய வேண்டும். இறை வனிடம் சென்று, 'பழைமையான மெய்ப் பொருளே; புதுமை நலம் நல்குபவரே; உன்னை ஆண்டவனுகப் பெற்ற நாங்கள் சிறப்புடைய உமது அடிமைகள். உம் தொண்டர்களுடைய திருவடிகளை வணங்கு வோம். அவர்களை எமது உறவினர்களாக, எமது கணவர்களாகக் கருதுவோம். அவர்கள் விரும்பிக் கட்டளையிட்டதை அவர்களுக்கு அடிமையாயிருந்து குற்றேவல் செய்வோம்; என்று இறைவனிடம் முறையிட்டு அடியார்கள் தொண்டிலீடுபடுவதாகக் கூறுகிருர் மாணிக்கவாசகர்.

''உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே
பாங்காவோம்
அன்னவரே எங்கணவராவார் அவருகந்து
சொன்னபரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்''.

அறிவுடைய ஆன்மாவின் 'ஆணவம்', என்ற கட்டியானது கரைந்து நீராகி இறைவனுடைய திரு வடிகளை அடைவதுதான் பக்தியினால் ஏற்படும் நற்பலனாகும். கரையும் இடம் அடியார் தொண்டே. அத்தொண்டில் நீர்மல்கும் கண்ணனராகி நெஞ்சங்

குழைந்து நைபவர்கள் நேரிழையார்கள். சேவை யின் பரோபகாரச் சின்னங்கள் நேரிழையார்கள். தனக்குத் தானே உறவல்ல என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டு, உறவுக்கெல்லாம் உறவா யிருக்கிற இறைவனை அறிந்து கொண்டவர்கள் நேரிழையார்கள். புரியாத நிலையிலும், அறியாத நிலையிலும் முழுவதும் தெரியாத நிலையிலும் ஏற் படும் கவலையைப் போக்க, ஞானசிரியனருளால் இறைவனிடம் அடைக்கலம் புகுந்தவர்கள் நேரிழை யார்கள். தங்களுக்குக் கிடைத்த மோசமான அனுப வங்கள், பழக்கவழக்கங்கள், கெட்ட சூழ்நிலைகள் தங்கள் குழந்தைகளுக்கும் கிடைத்துவிடக் கூடாது என்ற எண்ணத்தில் நல்ல புண்ணிய காரியங்களை மனமுவந்து செய்து கொண்டிருப்பவர்கள் நேரிழை யார்கள். அறிவு மட்டத்தில் ஏற்படும் இன்ப துன் பங்கள், மன மட்டத்தில் ஏற்படும் லாப நஷ்டங்கள், உடல் மட்டத்தில் ஏற்படும் வெற்றி தோல்விகள், ஆகிய மாறுதல்கள் ஏற்படும்பொழுது உள்ளத்தினைச் சமநிலையில் வைத்திருப்பவர்கள், நேரிழையார்கள். உள்ளத்தில் எவ்விதக் கவலையும் ஆவலுமில்லாமல் தான் செய்யும் பணியே பேரானந்தம் என்ற மனப் பாங்குடன் தன்னை மறந்து கண்ணுங் கருத்துமாகச் செயலாக்கத்தில் முழுமனதுடன் ஈடுபடுபவர்கள் நேரிழையார்கள். திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களைக் கண்ணின் பாவைகளாகக் கருதுபவர் கள் நேரிழையார்கள். இந்து தர்மங்களைப் பேணி வாழ்கின்றவர்கள் நேரிழையார்கள்.

## 3 வாழ உலகினில் பொழிவாய்

வருணதேவனிடம் மக்கள் வாழ்வதற்கு மழை பொழிய வேண்டுமென்று கட்டளை இடுகிறாள் ஆண்டாள். போர்க்களத்தில் இராமபிரானுடைய வில்லாகிய சார்ங்கமானது வீசிய பாணங்களைப் போல் உயிரினங்கள் வாழ, மழை பொழியவேண்டு மென்று வருணதேவனுக்குக் கட்டளையிடுகிறாள் ஆண்டாள்.

'கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்னப் பொருள் எனத் தங்காது போயிற்று தாடகையின் மார்பில் பட்ட ராமபாணம்; செவியுறு கேள்விச் செல்வனை வாலியை மாற்றியது அவன் மார்பில் பட்ட ராமபாணம்; ஐம்புலன்களால் தம்மை அடக்கிய முனிவர்களது தலைமையையும் நிலைமையையும் அடங்கச் செய்த காலத்தில் பொலிந்ததைவிட மும்மடங்கு பொலியச் செய்தது, இராவணனது மார்பில் பட்ட ராமபாணம்.

''தம் அடங்கு முனிவரையும் தலை அடங்க,
நிலை அடங்கச் சாய்ந்த நாளின்,
மும்மடங்கு பொழிந்தன, அம்முறை துறந்தான்
உயிர் துறந்த முகங்கள் அம்மா!''

என்று கூறுவார் கம்ப நாட்டாழ்வார்.

பகவானுடைய ஆயுதங்கள் என்னும் ஆபரணங்கள் என்றும், அவைகளின் தன்மைக் கேற்ப ஞானம் சக்தி பெற்றிருக்கின்றன. பகவானை வெறுத்து நிற்கும் பிரதிகூலருக்கு அவை ஆயுதங்களாகத் தோன்றும். அவனை விரும்பி நிற்கும் அனுகூலருக்கு அவை அழகிய ஆபரணங்களாய்த் தோன்றும். நித்ய சூரிகளே ஆயுதங்கள் என்றும், ஆபரணங்கள் என்றும் பெயர் பெற்றுள்ளார்கள் என்பது ஆசார்யர்களுடைய திருவுள்ளமாகும்.

இராமபிரானைக் காட்டிலும் அவனுடைய பாணத்திற்கு இரக்கம் அதிகம். காகாஸுரனைத்

துரத்திச் சென்ற அவனுடைய பாணம், அவனை அப்போதே அழித்திருக்கலாம். ஆனால் அழிக்க வில்லை. இராமபிரானையடைந்து அவன் எப்படி யாவது உய்வு பெறட்டும் என்ற இரக்கமே அதற்குக் காரணமாகும். ஆகையினால் தான் ஆண்டாள், ‘தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல் வாழ உலகினில் பெய்...’ என்று வருண தேவனுக்குக் கட்டளையிட்டாள். பகவானை வெறுத்து நிற்கும் பிரதிகூலர்களுக்கும் வாழ்வளிக்க வேண்டுமென்று விரும்புகிறாள் ஆண்டாள். (திருப்பாவை 4)

பகவானை விரும்பி நிற்கும் அனுகூலருக்கு, அவர்களைத் தொண்டர்களாகக் கொண்டு ஆளும் அம்பிகையின் சிறிய இடையைப் போல் மின்னல் வெட்டி மழை பொழிய வேண்டுமென்று வருணதேவ னுக்குக் கட்டளை இடுகிறார் மாணிக்கவாசகர். (திருவெம்பாவை 16)

பிரதிகூலர்கள் மீது வெறுப்போ, அனுகூலர் கள் மீது விருப்போ பகவானுக்கு இல்லை என்பதை ஆண்டாளும் மாணிக்கவாசகரும் அறிவுறுத்துகிறார் கள். தீப்பற்றி எரியும் தன்மை மரமெங்கும் வியா பித்திருக்கிறது. பச்சை மரத்திலும் அவ்வியல்பு உண்டு. ஆனால் அது மறைந்துள்ளது. அது உலர வேண்டும். பிறகு தொடர்ந்து தீயோடு தொடர்பு கொள்ளும் பொழுது பச்சை மரமும் பற்றி எரிகிறது. பிரதி கூலர்கள் உள்ளம் பச்சை மரம் போன்றது. அனுகூலர்கள் உள்ளம் உலர்ந்த மரம் போன்றது. பகவான் தீயாக இருக்கிறார். உலர்ந்த மரத்தில் தீப்பிடிப்பது போல மோகம் விட்டவர்கள் உள்ளத் தில் ஞானத் தீயானது பிடிக்கும்.

காலையில் அமாவாசை திதி என்று தர்ப்பணம் செய்தவர் இரவில் பௌர்ணமியின் சந்திரனைக்

காதலியிடம் வர்ணிக்கிறாரென்றால், அந்த மறதிக்குக் காரணம் - அவரது உள்ளம் பச்சை மரம். ஞான சூரியனால் அதனைப் பற்ற முடியவில்லை. காதலின் சக்திதான் கடவுள் நிலையடைய ஏணிப்படிகளாகும். 'காதல் செய்யும் மனைவியே சக்தி கண்டீர்! கடவுள் நிலை அவளாலே எய்தல் வேண்டும்' என்ற பாரதியின் கூற்று ஆராயத் தக்கதாகும். விருப்பு, வெறுப்பிலிருந்து விடுதலையடையும் பொழுதே காதலின்பத்தை உண்மையாகவே அனுபவிக்க முடியும். பூர்ண இன்பத்தின் கருவூலம் ஆன்மப் பக்குவமேயாகும்.

மனச்சாட்சியை உணரும் மனிதன், அதன்படி வாழப் பயிற்சி பெற்ற நிலையே ஆன்ம பக்குவமாகும். அந்த ஆன்மப் பக்குவம் பெற அறிவுடைய ஆன்மா தன்னைச் சுற்றியுள்ள பொருள்கள் அனைத்தும் இறைவன் படைப்புக்கள். அவைகளில் மறைந்து அவன் வசிக்கிறான் என்ற பயிற்சியினை உள்ளத்திற்குக் கொடுத்துக்கொண்டே வரவேண்டும். 'தனக்கு முன்புள்ள அறிவுள்ள பொருள்கள் அறிவற்ற பொருள்கள் எல்லாம் நாராயணனே என்று ஆராய்ந்துணர மாட்டாதவர்கள் கற்ற கல்வி எல்லாம் மிகமிகத் தாழ்ந்தது' என்பர் திருமழிசை ஆழ்வார்.

தூணிலே நாராயணனைக் கண்டான் பிரகலாதன். தன்னைச் சுட்டவனுடைய இதயத்தில் ஆத்மராமனைக் கண்டார் மகாத்மா காந்தி. தன்னுடைய கண்கள் பறிக்கப்பட்டதற்குக் காரணமாயிருந்த நாலூரானுடைய இதயத்தில் இறைவனைக் கண்டான் கூரத்தாழ்வான். விளையாடும் சிறுவர்கள் கட்டிய மணற் கோயிலை, ஸ்ரீ ரெங்கநாதர் ஆலயமாகக் கண்டார் இராமானுஜர்.

பிரகலாதன், மகாத்மா, கூரத்தாழ்வான், இராமானுஜர் ஆகியோர் தம் கண்களில்பட்ட அறி

வுள்ள அறிவற்ற பொருள்களைத் தாங்கள் வணங் கும் இறைவனாகவே கருதும் உள்ளத்தை, ஞானா சிரியனருளால் பயிற்சி பெற்றிருந்தார்கள். உத்தவ கீதையின் சாரமான உண்மை அவர்களது உடலில், ஊனில், உயிரில் கலக்கப்பட்டுவிட்டது. 'பாவனா ரூபமே பக்தியின் சொரூபம்', என்ற கொள்கையில் அவர்கள் உள்ளம் வளர்ந்து முதிர்ச்சியடைந்து விட்டது.

'நீ உடலன்று; பிறரும் உடலன்று; எல்லோ ரும் ஆன்ம சொரூபம். அதில் உயர்வு தாழ்வு இல்லை, ஆகையால் வெட்கத்தை விட்டு எங்கும் வணக்கம் செய்', என்பதே உத்தவ கீதையின் சார மான உண்மையாகும்.

கலியாணத்திற்கு நாள் எண்ணும் பிரம்மச் சாரியைப் போல், சதா ஊழிமுதல்வன் நாராயண னையும் அவன் அவதாரங்களில் காட்டிய குணங் களையும் நினைத்துக் கொண்டிருந்தாள் ஆண்டாள்.

நினைத்த உள்ளத்தில் காட்சியளித்தான் வருண தேவன். அவனைப் பார்த்தாள் ஊழிமுதல் வன் உருவில்.

கலை உள்ளம் (ஆர்ட்டிஸ்ட் மைண்ட்) உள்ள வன் எந்த ஒரு பொருளைப் பார்த்தாலும் கேமிரா கண்ணோட்டத்தோடு பார்ப்பதைப் போல் வருண னைப் பார்த்தாள் ஊழி முதல்வன் உருவில் ஆண்டாள். 'சமதர்ம உணர்வில் நின்று மக்களைக் காக்கும் ஊழி முதல்வனைப் போல், நீயும் மழை பெய்து மக்களைக் காக்க வேண்டுமென்று கட்டளை யிட்டாள்.

ஊழி முதல்வன் தன்னை அடைக்கலமடைந் தவர்களைச் செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்

கிறான். அவனைப் போல் நீயும் கடலுக்குள் புகுந்து உப்பு நீரை முகர்ந்து கொண்டு இடித்து ஆகாயத்தில் ஏறி நன்னீராகப் பெய்ய வேண்டுமென்றாள். விசால மான அழகிய திருத்தோள்களுடைய நாராயணனின் வலது கையிலுள்ள சக்ராயுதம் சரணடைந்தோர் களின் அக இருளை நீக்கிப்பிரகாசிக்கச் செய்கிறது. நீ அந்த சக்ராயுதத்தைப் போல் மின்ன வேண்டும். இடது கையிலுள்ள பாஞ்சஜந்யம் அடியார்களுடைய புலன்களை நல்வழியில் செலுத்துகிறது. அவர் களுடைய எதிரிகளைக் கிடுகிடுக்கும்படிச் செய்து விடுகிறது. நீ அதனைப் போல் இடிமுழக்கமிட்டு உலகு கிடுகிடுக்கும்படிச் செய்து நல்ல மழை பெய் விக்க வேண்டும். பகவானுடைய வில்லாகிய சார்ங் கம் வேகத்துடன் வீசிய பாணங்களைப் போலவே நீயும் எல்லா உயிரினங்களும் வாழ, உலகினில் மழை பொழிய வேண்டும். நானும் எனது தோழிப்பெண் களும் மகிழ்ந்து மார்கழி நீராடுவோம், என்று கூறு கிறாள் ஆண்டாள்.

ஆழிமழைக் கண்ணா ஒன்று நீ கைகரவேல்
 ஆழியுட்புக்கு முகந்து கொடார்த்தேறி
ஊழிமுதல்வ னுருவம் போல் மெய் கருத்துப்
 பாழியந் தோளுடைய பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்றதிர்ந்து
 தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
 மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(திருப்பாவை 4)

வருணதேவனை ஊழி முதல்வனாக, பற்ப நாபனாக நினைவின் முதிர்ச்சியில் கண்டாள்; ஆனந்தமடைந்தாள் ஆண்டாள். அதே வருண தேவனை, நினைவின் முதிர்ச்சியால் அம்பிகையின் அங்கங்களாகக் காண்கிறார்; ஆனந்த மடைகிறார் மாணிக்கவாசகர்.

தங்களது கண்களின் முன்தோன்றிய வருண தேவனை தாங்கள் வணங்கும் தெய்வங்களாகக் கொண்டாடி, உத்தவகீதையின் சாரமான உண்மையை உலக மக்களுக்குக் குறிப்புணர்த்துகிறார்கள் ஆண்டாளும் மாணிக்கவாசகரும்.

'முதலில் இந்தக் கடலில் நீரை முகர்ந்து கொண்டு இதனைச் சுருங்கச் செய்து மேல் எழுந்து வானத்தில் மேங்களாக மாறிப் பரவுகின்றன நீல நிறமுடையனவாய் அம்பிகையின் திருமேனியைப் போலத் தோற்றம் அளிக்கின்றன. பின் அந்த மேகங்கள் மின்னுகின்றன. அந்த மின்னலானது அடியார்களைக் கொண்டு ஆளும் அம்பிகையின் சிறுகிய இடையைப் போல மின்னி விளங்குகின்றன. (அம்பிகையின் திருவருளைப் பெற்று, இறைவனை அடைகிறார்கள் அடியார்கள் என்று இங்கு குறிப் புணர்த்தப்படுகிறது ) மேகங்கள் இடிமுழக்கம் செய்கின்றன. அந்த முழகக்ம் அம்பிகையின் திருவடியில் அணிந்துள்ள பொன்னலாகிய அழகிய சிலம்புகள் ஒலிப்பது போல் ஒலிக்கின்றன. மேகங்களில் இந்திர வில் தெரிகிறது. அது வளைந்து தோன்றும் அம்பிகையின் திருவுருவம் போல் விளங்குகிறது. அடியார்களை எல்லாம் ஆளாகக் கொண்ட அம்பிகையினின்றும் பிரிதல் இல்லாதவர் தலைவராகிய இறைவனார். அவரது அடியார்களுக்கும், பெண்களாகிய நமக்கும் அவர் திருவுளங் கொண்டு முந்தி வழங்குகிறார் இனிய திருவருளை. அந்தத் திருவருளைப் போன்று மழையே நீ பொழிவாயாக,' என்று வருணதேவனை வேண்டுகிறார் மாணிக்கவாசகர்.

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம்பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்

*தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு*
*முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே*
*என்னப் பொழியாய் மழை ஏலோர் எம்பாவாய்.*

*(திருவெம்பாவை 16)*

தந்தையை நேரே அணுகுவதைக் காட்டிலும் தாய் மூலம் அணுகும்போது அச் செயல் எளிதாக முடியுமல்லவா? அம்முறையினையொட்டியே அப்பனை நேரே அணுகுவதைக் காட்டிலும் அவன் விரும்பும் அம்பிகையின் மூலம் அணுகும்போது அச் செயல் எளிதாக முடியும் என்ற வாழ்வியல் நடைமுறையை யொட்டி அடியார்கள் அம்பிகையை அடைந்து, அவள் திருவருளால் அப்பனை அடைகிறார்கள் என்ற கருத்தினை 'எம்மை ஆளுடையாள் இட்டிடையின் மின்னிப் பொலிந்து,' என்ற அடியிலும், 'நந்தம்மை ஆளுடையாள் தன்னிற் பிரிவிலா' எங்கோமான்,' என்ற அடியிலும் குறிப்புணர்த்துகிறார் மாணிக்கவாசகர்.

ஆண்டாளும் நப்பின்னைப் பிராட்டியின் மூலமே கிருஷ்ணனை அடைய வேண்டுமென்ற கருத்தினை திருப்பாவை 18, 19, 20 பாடல்களில் குறிப்பிடுகிறாள். பாவைப் பாடல்கள் வாழ்க்கையின் நடைமுறையைச் சுட்டிக் காண்பிக்கின்றன.

நல்லொழுக்கமற்ற சாதாரண மனிதனைப் போல் அல்லாமல் மேலான ஒருவனிடம் அமாநுஷ்யமான தெய்வாம்சமானது நற்பயனைக் கருதி அடிக்கடி தெளிவாகப் புலனாகும். அதைத் தான் 'ஆத்ம பரிபாகம்' என்று சொல்லப்படும். சிலர் அந்த ஆத்ம பரிபாகத்தை மற்றவர்களைக் காட்டிலும் மிக அதிகமாகப் பெற்றிருக்கிறார்கள். அவர்களுடைய பேச்சிலும் எழுத்திலும் அந்த தெய்வீக அம்சத்தை நாம் காணவும் கேட்கவும் சாத்தியமாகிறது.'

அறிவுடைய ஆன்மா, ஆத்ம பரிபாகம் அடையும் பொழுது முதலில் தன்னுடைய இயல்புகளை உணர்ந்து தன்னைத் திருத்தியமைத்துக் கொள்வதில் அதிதீவீரமாகச் செயல்படுவான். அரக்கர்களிடையே வாழும் விபீஷணனை ஆஞ்சநேயர் அரக்கனல்ல என்று கண்டு கொண்டாரென்றால் ஆஞ்சநேயருடைய ஆத்ம பரிபாகமே அதற்குக் காரணமாகும்.

ஆத்ம பரிபாகம் அடைந்த ஆண்டாள், தன்னைத் திருத்தியமைத்துக்கொள்ள ஆசைப்பட்டாள். அதற்குத் தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தைக் காணவேண்டும். அதற்கு கிருஷ்ணன் மனைவி நப்பின்னைப் பிராட்டியிடம் கண்ணாடி வேண்டுமென்று பிரார்த்தித்தாள் ஆண்டாள். பூமியிலிருந்து கிளம்பும் முக்குணங்களான ஸத்வம்,ரஜஸ்,தமோ என்பவைகள் தாக்காமலிருப்பதற்காக விசிறியும் வேண்டும் என்று வேண்டினாள். அத்துடன் காலதாமதம் செய்யாமல் பக்தி நீராட்டம் செய்விக்க வேண்டுமென்றும் கூறினாள்.

'உக்கமும் தட்டொளியுந் தந்துன் மணாளனை
இப்போதே எம்மை நீராட்டு......'

(திருப்பாவை 20)

கலை, இலக்கியம், நாகரீகம், பண்பாடு என்றெல்லாம் பசப்பு வார்த்தைகள் கூறிக்கொண்டு காலத்தை வீணாக்காமல், பாவைப் பாடல்களைக் கற்றுணர்ந்து ஞானாசிரியன் கருணையால் தன்னைத் தானே திருத்தியமைத்துக் கொண்டு வாழும் வாழ்வு மானுட வாழ்வு. வாழ்க்கை நேயம், சிந்தனை, உணர்ச்சித் தெளிவு, நானாவிதத் திறமை, கூரிய அழகுணர்ச்சி ஆகியவைகளெல்லாம் இயக்கப்படுவது ஆன்ம பக்குவத்தினால் தான்.

ஆன்ம பக்குவம் பெறும் பொழுது அறிவுடைய ஆன்மா தன்னைச் சுற்றியுள்ள சூழ்நிலையை மறக்க வேண்டிய அவசியமில்லை; துறக்கவேண்டிய நிர்ப் பந்தமுமில்லை. காம, குரோத, லோப குணங்களைக் கொண்ட கௌரவர்களிடையே வாழ்ந்த பீஷ்மர், துரோணரைப் போல் வாழ முடியும். சேற்றிலே ஒட்டாத பிள்ளைப் பூச்சியின் இயல்பை அடைய முடியும். ஆண்டாள் ஊழிமுதல்வனையும், மாணிக்க வாசகர் அம்பிகையின் அங்கங்களையும் பெய்யும் மழையில் கண்டு அனுபவித்து இன்பமடைந்ததைப் போல் இன்பமடைய முடியும்.

'ஊழி பெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படுவார்'

என்ற இலக்கணமாக வாழ முடியும். வாழ்வதற்கு ஞான மழை பொழிய இறைவனை வணங்குவோமாக.

## 4. பாடுவீர்! சிந்திப்பீர்! போக்குவீர்!

ஒருவனுடைய மனநிலையைப் பொறுத்து, அவனுடைய உழைப்பைப் பொறுத்து, அவனுக்குக் கிடைக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பொறுத்துத் தான் வெற்றியோ அல்லது தோல்வியோ ஏற்படும். தீவிரமான நம்பிக்கையைப் பொறுத்துத்தான் மனதில் ஊக்கம் ஏற்படும். ஊக்கத்தைப் பொறுத்தே தெளிவான மனநிலை, உழைப்பு, சந்தர்ப்ப சூழ்நிலைகள் அமையும்.

அறிவிலே ஏற்படும் தெளிவைப் பொறுத்தே மனதில் நம்பிக்கை வேரூன்றி நிலைத்து நிற்கும். சிந்தனையைப் பொறுத்தே அறிவிலே தெளிவு ஏற்படும்.

சிந்தித்து அறிவிலே தெளிவடைந்து செயலிலீடுபட்டுக் குறைகளைக் கண்டுபிடித்து, அதை நீக்கப் பாடுபடுவது சாதாரணமாக மனிதன் கடைப்பிடிக்கும் நடைமுறை வழக்கம். திட்டமிட்டுச் செயலிலீடுபட்டுப் பின்னர் அதிலேற்பட்ட அனுபவங்களைச் சிந்தித்து அதிலுள்ள குறைகளைக் கண்டுபிடிப்பது, அவைகளைப் போக்குவது; பின் செயல் செய்யும் காலத்திலும் எதிர்காலத்திலும் மீண்டும் குறைகள் ஏற்படாவண்ணம் பாதுகாத்துக் கொள்ளுவது; என்பது உயர்ந்த மனிதன் கடைப்பிடிக்கும் நடைமுறை வழக்கம். அம்முறையினை ஆண்டாள் கூறுகிறாள்.

வாயினால் பகவானுடைய நாமங்களைப் பாடி, அந்நாமங்களில் பொதிந்துள்ள அவனுடைய கல்யாணகுணங்களின் பொருள்களைச் சிந்தித்தால் ஏற்கனவே செய்த குற்றங்களும் இனி நம்மையறியாமல் செய்யப் போகிற குற்றங்களும் நெருப்பில் விழுந்த தூசியைப் போல் உருத் தெரியாமல் பொசுங்கிப் போகும் என்கிறாள் ஆண்டாள்.

'வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்,
தீயினில் தூசாகும் ...'

செயல் செய்வதற்கு முன்பு பகவத் நாமங்களைப் பாடி அவைகளின் பொருள்களைச் சிந்திக்க வேண்டும் என்ற ஆண்டாளின் கருத்து சிந்திக்கற்பாலது.

உடல், உள்ளம். புலன்கள், செய்யக்கூடிய செயல், தெய்வம் ஆகிய ஐந்தும் ஒரு செயலை இயக்குகின்றன. (கீதை 18ம் அத்தியாயம் சுலோகம் 14) செயலிலிறங்கும் பொழுது உள்ளத்திலேற்படும் விருப்பு வெறுப்பற்ற சாந்தமான குணநிலையைப் பொறுத்தே, அறிவு தான் பெற்ற 'நுண்மான் நுழை புலம்' என்ற இலக்கணத்திற்கேற்பச் செயல்படும். பகவானுடைய குணங்களைப் பாடிச் சிந்திக்கும் பொழுதே அறிவுடைய ஆன்மா, சாந்தமான குண நிலையைப் பற்றித் தெளிவான அறிவுடன் இயங்கு வான். அப்பொழுது செயலிலேற்படும் குற்றங் களை உடனுக்குடன் சிந்தித்து அவைகளைப் போக்கு வதற்கும் மீண்டும் வராமல் தடுப்பதற்கும் முற்படு வான். பொய்யான புலன் நெறிமீது போதையுற்று மயங்காமல் அருள் ஆட்சியில் மேலோங்கி நிற்பான்.

நாம ஜெபமின்றி செயலிலீடுபடும் பொழுது பலனில் பற்று ஏற்படும், பலனில் பற்று ஏற்படும் பொழுதே பயமும் சேர்ந்து உண்டாகும்.

பயத்தால் போவது நம்பிக்கை; நம்பிக்கை போவதால் சூழ்வது சஞ்சலம்; சஞ்சலம் சூழ்ந்தால் போவது அறிவிலேற்படும் தெளிவு; தெளிவு போகும் போது ஏற்படுவது மனக் குழப்பம்; குழப்பத்தால் தவறுவது கொள்கை; கொள்கை தவறும் போது ஏற்படுவது செய்கை தடுமாற்றம்; செய்கை தடுமாற் றத்தால் மறைவது இலட்சியம்; இலட்சியம் மறையும்

பொழுது வாழும் வாழ்வு சாதாரண வாழ்வே. வாழ்வாங்கு வாழும் மேலான வாழ்வல்ல. பகவந் நாம ஜெபம் எல்லாப் பயங்களையும் போக்கும் என்று பாகவதம் கூறும் (நாம சங்கீர்த்தனம் ஸர்வ பயப்ர நாசனம்).

பற்றற்ற நிலையில் செயல்பட வேண்டுமானால், செயல்படும் மனிதன் அவனுடைய உண்மையான இயல்பினை உணர்ந்து கொள்ளவேண்டும். உணர்வதற்கு குணங்களுடையவனாக வேண்டும். அதற்குப் பகவானுடைய குணங்களைப் பாடிச் சிந்திக்கவேண்டும்.

ஆயிரம் யானை பலமுடைய தாடகையை வதம் செய்தல் என்று செயலை முடித்த பிறகு தான், இராமருக்கு விசுவாமித்திரர் படைக்கலன்களைத் தந்து அவற்றினைக் கையாளும் முறைகளைக் கூறிச் சிந்திக்க வைத்தார். வதம் செய்யுமுன்பு படைக்கலன்களை கொடுத்திருக்கலாமல்லவா? ஏன் கொடுக்கவில்லை?

கொடுத்திருந்தால் அவைகளைத் தன்னுடைய புத்திசாதுரியத்தால் கையாண்டிருப்பான். தெளிவடைந்த சிந்தனையில் கையாண்டிருக்க மாட்டான். அனுபவம் செயலில் ஏற்படும் பொழுதுதான் அந்தச் செயலை கீதையில் கூறியபடி ஐந்து பேர் இயக்குகிறார்கள். (உடல், உள்ளம், புலன்கள், செய்யும் செயல், தெய்வம்) என்பதை உணர்வான், ஆணவத்தை அழிப்பான். தத்துவ சிந்தனையில் ஈடுபடுவான்.

எவ்வளவு தான் திடபுத்தியுடன் ஒரு செயலில் ஈடுபட்டாலும், செயல் செய்து கொண்டிருக்கும் பொழுது சந்தேகங்களும் யோசனைகளும் மாறி மாறி

வந்து புத்தியைக் கலக்கிக் கொண்டிருக்கும். அந்தக் கலக்கத்திலிருந்து விடுதலையடைய, 'கருமமும் கரும பலனுமாகிய காரணன் தன்னை, திருமணி வண்ணனை செங்கண்மாலினை, ஒருமை மனத்தி னுள் பாடி அவன் குணங்களைச் சிந்திப்பதே சிறந்த வழியாகும். அந்த வழியைத் தான் ஆண்டாள் 'வாயினால்' பாடி மனத்தினால் சிந்திக்கப் போய பிழை யும் புகு தருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்...' என்று அருளிச் செய்தாள்.

பகவானுடைய கல்யாண குணங்களைப் பாடி சிந்திப் பதனையே மார்கழி நீராட்டம் என்று இரு பாவை நூல்களும் குறிப்பிடுகின்றன.

"தயரதன் பெற்ற மரகத மணித்தடம்", என்று ராமபிரானைக் குறிப்பிடுகிறார் ஆழ்வார். அந்த மரகத மணித்தடத்தில் குதித்து அவனுடைய 'நற் குணக்கடல் ஆடுதல் நன்று...' என்பர் கம்பர்.

புலிக்குப் பயந்த ஒரு மனிதனும் குரங்கும் மரத்தில் ஏறிக் கொண்டார்கள். குரங்கின் நிழலை அதனுடைய உடம்பு என்று நினைத்து அதன்மீது பாய்ந்தது புலி. குரங்கு தன் நிழலைத் தனது உடம் பாகவே நினைத்துக் கொண்டது. உடனே பயந்து கத்திக் கொண்டே கீழே விழுந்தது. குரங்கு புலிக்கு இரையானது. பின்னர் மனிதனுடைய நிழலை மனிதன் என்று நினைத்து அவன்மீது பாய்ந்தது புலி.

ஆனால் மனிதன் பயப்படவில்லை; கத்த வில்லை; கீழே விழவுமில்லை. நன்றாகச் சிரித்துக் கொண்டே மரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். 'தான் வேறு'; தன் நிழல் வேறு என்று பிரித்து உணர்ந்தமையே அச்சிரிப்பிற்குக் காரணமாகும். புலி ஏமாந்து போய்விட்டது.

தான் வேறு; தன்னுடைய நிழல் வேறு என்று பிரித்து உணர்ந்த அந்த சாதாரண மனிதனைப் போல், இறைவனருளால் வினைப் பயனிலிருந்து விடுபட்ட மனிதன், தன்னுடைய உடல் வேறு; ஆத்மா வேறு என்று பிரித்து உணர்கிறான். அப்பொழுது அவனுடைய உண்மையான அறிவு துலங்கும். அது தெருள் எனப்படும்.

பிரித்து உணராத நிலையில் அவனுடைய அறிவு புலனுணர்வுகளுக்கு அடங்கி உடற்பற்றான மயக்கதில் செயல்படும். அது மருள் எனப்படும். வளர்பிறை-தேய்பிறை, பொருள் சேர்வது-பொருள் நீங்குவது, பகல்-இரவு மாறி மாறி வருவது போல் தெருளும் மருளும் மாறி வருகின்றன. இந்தத் தெருளையும் மருளையும் மாய்க்கும் பொழுது உள்ளம் அடையும் நிலைதான் பற்றற்ற நிலை. தெருள், மருள் ஆகியவற்றின் இயல்புகளை உணர்ந்து பற்றற்ற நிலையில் உள்ளம் செயல்பட அந்த உள்ளத்தில் இறைவன் உறைய வேண்டும் என்கிறார் ஞானி நம்மாழ்வார்.

"... ... ... அவர் வந்து என்
உள்ளத் துள்ளே யுறைகின்ருர்"

"வளரும் பிறையும் தேய்பிறையும் போல அசைவும் ஆக்கமும், வளரும் சுடரும் இருளும் போல் தெருளும் மருளும் மாய்த்தோமோ" (8-8-10)

மன அழுக்கினைப் பகவந் நாம ஜெபத்தினால் போக்கி அந்தப் பகவானை உள்ளத்தில் உறையச் செய்வதற்காக ஆடும் பக்தி நீராட்டமே, மார்கழி நீராட்டமாகும்.

'மொய்யார் தடம் பொய்கை புக்கு' 'பங்கயப் பூம் புனல் பாய்ந்து ஆடு' 'இருஞ்சுனை' எனப் பல பாடல்கள் மூலம் அந்தப் பக்தி நீராட்டத்தினைத் திருவெம்பாவைப் பாடல்கள் உணர்த்தும்.

மருமகளின் விம்மல்கள், மாமியாரின் தொன தொனப்புடன் கூடிய கழுத்து முறிப்பு, இந்த ஆணவக் கூத்துக்களைக் கண்ட மாமனுர் ஒன்றும் செய்ய இயலாமல் விரக்தியினுலே தன் தலையில் தனக்குத் தானே போட்டுக் கொள்ளும் தப்புத் தாளங் கள் போன்ற இல்லங்களில் போடப்படும் கூத்துக் களை நிறுத்துவதற்குக் காளிங்கன் மீது கூத்தாடிய கூத்தனுரின் குணக் கடலில் நீராட வேண்டும்.

பின் 'சிந்தனை' என்ற சோப்புப் போட்டுத் தேய்க்க வேண்டும். அதாவது அவன் குணங்களின் பொருளை உணர்ந்து அவன் வாழ்ந்து காட்டிய உண்மைகளைச் சிந்திக்க வேண்டும்.

இறைவனுடைய திருவருளைப் பாடிப் பாடி அவைகளிலுள்ள உண்மைப் பொருளைச் சிந்தித்து சிந்தித்துப் பக்தி செய்பவர்கள் 'சித்தம்' அழகுடைய வர்களாவார்கள். அவர்கள் நம் சிவபெருமானைப் பாடமாட்டார்களா? என்று ஓர் வினு எழுப்புவதாக மாணிக்கவாசகர் திருவெம்பாவை மூன்ருவது பாட லில் 'சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை' என்று கூறுகிருர். அறிவிலே தெளிவடைந்தவர்கள் சித்தம் அழகுடையவர்களாவார்கள்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கும் அந்தக் கரணங்கள் எனப்படும். இவை ஒன்று சேர்ந்து இருக்கும். நினைப்பது மனத்தின் வேலை. நினைப்பதை உருவம் கொடுப்பது புத்தி யின் வேலை. உருவம் கற்பித்ததைப் பற்றிக்கொள் வதுசித்தத்தின் வேலை. சித்தம் பற்றிக் கொள் வதைச் செயல்படுத்துவது அகங்காரத்தின் வேலை.

சித்தமானது தெய்வ சிந்தனையால் அழகு படுத்தப்படும் பொழுது சாத்வீக அகங்காரம் செயலை நல்ல முறையில் திறம்பட நடத்தும்.

சித்தம் அழகுடையவள் வாழைப் பூ மாதிரி வருத்தமுடன் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு இருக்க மாட்டாள். எப்பொழுதும் செந்தாமரை யினைப் போன்று முகமலர்ச்சியுடன் இருப்பாள். முத்துப் போன்ற அவளுடைய பற்களை புன்சிரிப் புடன் வெளிப்படுத்துவாள்.

வெளிப்படுத்திய ஒரு பெண்ணைப் பற்றி திரு வெம்பாவை மூன்றாவது பாட்டு அறிமுகப்படுத்து கிறது. அந்தப் பெண் நாள் தோறும் தனது தோழி கள் எழுப்பவருமுன்பு அவளே எழுந்து விடுவாள். அவர்கள் எதிரே போவாள். இறைவனை 'என் தந்தை, இன்ப வடிவினன், தன்னை வாழ்த்துபவர் களுக்கு மீண்டும் பிறவாத அமுத நிலையைத் தரு பவன்', என்று பேசுவாள். சாதாரணமாகப் பேச மாட்டாள். வாய் மிகுதியும் ஊறி இனிமை பயக்கும் படிப் பேசுவாள். அவள் செயல்கள் மூலம் துயில் எழுப்பும் பெண்கள் அவளைச் சித்தம் அழகுடைய வள்', என்று கண்டுகொண்டதாக திருவெம்பாவைப் பாட்டு மூன்று குறிப்புணர்த்தும்.

'முத்தன் வெள் நகையாய் முன்வந்து எதிர்
எழுந்து என்
அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அள்ளூறி
தித்திக்கப் பேசுவாய்'

கண்ணின் பாவைகள் போன்று பேணப்படும் இந்து தர்மங்களை உணர வேண்டும். ஆன்ம நேய ஒருமைப் பாட்டினை வளர்க்க வேண்டும். சித்தம் அழகுடையவர்களாகத் திகழவேண்டும்.

அதற்குப் பகவானுடைய நாமங்களைப் பாடு வோம்; அந்த நாமங்களில் குறிப்பிடும் உண்மைப் பொருள்களைச் சிந்திப்போம்; கர்மச் செயல்களிலேற் படும் பாபங்களை போக்குவோம்.

# 5. அரவம் கேட்டிலையோ?

கோபமும் ஆத்திரமும் கொண்ட மனநிலை ஒரு சமயம்; ஒரு வழியும் காணாமல் மனம் இடிந்து போனநிலை ஒரு சமயம்; உயிரையே விட்டுவிடலா மென்று முயன்ற சமயமும் உண்டு. இந்த கோப தாபங்களிலிருந்து விடுபட முயல வேண்டாமா? கொஞ்சமாவது அடக்க முயல வேண்டாமா? வேண் டும். முடியவில்லையே? ஆம்! முடியாது தான். ஈயம் தங்கமாக மாற முடியாதுதான். இருப்பினும் அந்த ஈயத்தைத் துடைத்து வைத்தால் கொஞ்சம் பளபளப்புடனாவது இருக்குமல்லவா? நிச்சயம் இருக்கும்.

துடைப்பதற்கு அருள்மிகு கோயில்களில் எழுந் தருளியுள்ளான் இறைவன். துயில் நீங்கி விழிப் புணர்வு பெற்று உள்ளத்தைப் பளபளப்புடன் வைத்துக் கொள்ள அறிவுடைய ஆன்மாக்களை அழைக்கிறது அதிகாலையில் கோயில்களில் ஊதப் படும் சங்கொலி.

'வெள்ளை விளி சங்கின் பேரரவம் கேட்டிலை யோ' என்று திருப்பாவையும் (பாடல் 6) 'எழில் இயம்ப இயம்பும் வெண் சங்கெங்கும்' என்று திரு வெம்பாவையும் (பாடல் 8) சங்கொலியைக் குறிப் புணர்த்துகிறது.

'ஓம்', என்னும் பிரணவம் சங்கு போன்றிருப் பதால் 'சங்கு' பிரணவத்தைக் குறிக்கும். பிரண வத்தை மந்திரத்துடன் சேர்த்து ஓதுகின்றவர் களுடைய உள்ளம் தூய்மை அடையும்; கோபதாபங் களை விரட்டி ஓட்டும்.

அதிகாலையில் கோயில்களில் ஊதப்படும் சங் கொலி வெறும் சடங்கல்ல. மனிதன் அறியாமை

என்னும் துயிலினின்று எழுந்து விழிப்புணர்வு எய்வ தற்கு பிரணவத்துடன் மந்திரத்தைச் சேர்த்து ஓத வேண்டுமென்பதை வலியுறுத்தும் வாழ்க்கைத் தத்துவமாகும்.

'மந்திரத்தை ஓதும் பயிற்சியினை அளிக்கும் பொழுது, கள்ள மனமுடன் தாய் வேடம் அணிந்து வந்த பூதனையைக் கொன்றவன், கள்ள மனத்தினை நீக்கிப் பொய் வேடத்தினைப் போக்கித் தூய்மையை யுண்டாக்குவான். சகடாசூரனைக் கொன்ற அந்தப் பகவான், கலியின் கொடுமைகள் உள்ளத்தினை வஞ் சிக்காமல் பார்த்து கொள்வான்; என்று தன் தோழியை விழிப்புணர்வடையச் செய்வதற்கு குரல் எழுப்புகிறாள் ஆண்டாள்.

மனத்தினைச் செம்மைப்படுத்தும் மந்திரம் ஓது தலில் ஈடுபடும் உள்ளங்கள் அறிவுடைய ஆன்மாக் களுக்கு நாயகனாகத் திகழ்வார்கள் என்பதை ஆண் டாள், 'நாயகப்பெண் பிள்ளாய்,' என்ற சொற் றொடரில் குறிப்பிடுகிறாள். 'பெண் என்ற வார்த் தை ஜீவான்மாவையும்' பிள்ளாய் என்ற வார்த்தை பிள்ளைகள் போல் கபடமில்லாத செயல்களை உடையவனென்பதையும் குறிப்புணர்த்தும்.

எப்படி நாயகனாகத் திகழும் தகுதியைப் பெற முடியும்?

வெண் சங்கினுடைய பெரிய ஓசையைக் கேட்க வேண்டும். (வெள்ளை விளிசங்கின் பேரரவம்) கேட்டால் இறைவன் மீதும், அவன் அமர்ந்துள்ள அறிவுடைய ஆன்மாக்கள் மீதும் உண்மையான அன்பு உண்டாகும். 'நின் திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க் கடிமை' என்று திருமங்கையாழ்வார் தம்முடைய மனமானது திரு மந்திரம் ஓதி உணர்ந்து அறிவுடைய ஆன்மாக்

களுக்கு அடிமையாகி விட்ட தென்று கூறுகிறார். அடிமையான மனிதன் பக்தி, ஞானம் என்ற இரண்டு சிறகுகளைக் கொண்ட பரத்துவத்தை (மேன்மையான இடத்தை) அடைவதற்கு பூவுலகில் வாசம் செய்யக்கூடிய பட்சி அதாவது பரத்துவாச பட்சி என்பதை உணர்கிறான்.

உணர்கின்றவன் பரத்துவாச ஆண் பெண் பட்சிகள் (ஆனைச் சாத்தான்கள்) கலந்து பேசின பேச்சினுடைய உட்பொருள்களைச் சிந்திக்கிறான். (கீசுகீ சென்று எங்கும் ஆனைச் சாத்தான் கலந்து பேசின பேச்சரவம்) அதாவது ஞான உணர்வினுக்கு அடிப்படையாக அமைந்த பாலுணர்வு அறிவுடைய ஆன்மாக்களின் உள்ளங்களை எப்படி எப்படி எல்லாம் ஆட்டிக் கொண்டிருக்கிறதென்பதை அறிகிறான். பற்றற்ற நிலையில் கர்மச் செயலில் ஈடுபடுவதே அந்த ஆட்டத்தை அடக்கும் வழி என்பதை உணர் கிறான். ஞானசிரியனருளால் அடக்கும் வழி கிடைக்கப் பெற்றவன் நாயகனுகிறான்.

சாரம் நிறைந்த உலகைச் செய்தவள் சீம் சாரம். பாயும் புலியின் கொடுமையை இறைவன் வைத்த இடம், அதன் கண்களில். பாயும் ஐம்புலன் களின் வேகத்தைத் தணிக்க இறைவன் வைத்த இடம், பெண்களின் கண்களில். அந்தக் கண்களில் இருந்து விடுதலை பெறவேண்டும். அதற்கு புலன் கள் மனத்திற்கு அடங்கவேண்டும். மனம் அறிவிற்கு அடங்க வேண்டும். கர்மச் செயல் அதற்கு ஏற்ற இடமாகும்.

தயிரைக் கடைந்த மத்தானது வெண்ணை யையும் மோரையும் தனித்தனியாகப் பிரித்துவிடும். அதுபோல் இறைப்பணியாகக் கருதிச் செய்யும் தொழிலில் ஈடுபடும் உள்ளமானது அத்தொழிலை யும் அத்தொழிலின் பலனில் வைக்கும் பற்றையும்

தனித்தனியாகப் பிரித்து விடும். பலனை இறைவனுக்கு அர்ப்பணித்துவிடும். இக் கருத்தை மத்தினால் கடையும் தயிரின் ஓசையில் ஆண்டாள் குறிப்பிட்டு 'ஓசைப்படுத்த தயிரரவம் கேட்டிலையோ', என்று பெண்ணிடம் கூறுகிறாள்.

மூன்று தடவை 'அரவம் கேட்டிலையோ' என்ற சொற்றொடரைக் கையாளுகிறாள் திருப்பாவையில் ஆண்டாள். அவைகளைக் கேட்டுப் பொருளுணர்ந்து வாழ்வில் கடைபிடிக்கிறவர்கள் நற்குணங்களால் ஆளப்பட்டு, நாயகப் பெண்பிள்ளைகளாகத் திகழ்வார்கள்.

மனத்தினை செம்மைப்படுத்தும் மந்திரத்தை ஓதவேண்டுமென்று 'வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ; என்று குறிப்புணர்த்துகிறாள். 'ஆனைச்சாத்தான் கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ', என்ற தொடரில் உடற்பற்றாலுண்டாகும் காமத்தின் தத்துவத்தைக் குறிப்புணர்த்துகிறாள். ஆன்ம நாயகனை அறியும் பற்றற்ற உள்ளம் பெறச் செய்யும் தொழிலுண்டாகும் பலனை இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டுமென்ற, தத்துவத்தை, 'மத்தினல் ஓசைப்படுத்தும் தயிரரவம் கேட்டிலையோ,' என்ற சொற்றொடர் மூலம் குறிப்புணர்த்துகிறாள் ஆண்டாள்.

பூமி வரண்டு கிடக்கும் பொழுதுதான் மேகங்களைத் திரட்டி மழையினைப் பொழிய வைக்கும் இந்திரனை மக்கள் கொண்டாடுவார்கள். இருள் பரவியிருக்கும் பொழுதுதான் அந்த இருளை ஓட்டும் கதிரவனை மக்கள் கொண்டாடுவார்கள். இருட்டால் ஏற்படும் துன்பமும் கதிரவனால் ஏற்படும் வெப்பமும் சூழும் பொழுதுதான், மக்கள் சந்திரனைக் கொண்டாடுவார்கள்.

அதுபோல் அறியாமையென்னும் துயிலின் பரிசினைச் சமுதாயம் பெற்றிருப்பதால் தான், ஆன்ம நாயகனை அடைக்கலமாகக் கொண்ட அடியார் களை ஆன்றோர்கள் அழைக்கிறார்கள்.

துயிலின் பரிசினைப் பெற்றவளுடைய செயல் களை திருவெம்பாவை ஏழாவது பாடலிலும், அச் செயல்களை நீக்கியவளுடைய செயல்களை எட் டாவது பாடலிலும் கூறுகிறார் மாணிக்கவாசகர்.

'தேவர்கள் பலரும் எண்ணியடைவதற்கு அரியவனாகிய ஒப்பற்றவன் இறைவன். பெரும் புகழுடையவன். அப்பெருமான் திருவீதி உலாவ எழுந்தருளுகிறான். எனவே அவனது சங்கு முதலிய வற்றின் ஒலிகள் கேட்கின்றன. கேட்டவுடன் 'சிவா' என்று சொல்லி வாயைத் திறப்பாள். தென் னவனே என்று சொல்லுவாள். அப்படிச் சொல்லி வாக்கினால் மட்டும் தவம் செய்யாமாட்டாள் நெருப் பிலிடப்பட்ட மெழுகுபோல் உருகி உடலினாலும் தவம் செய்வாள். ஆனால் இப்போது அவளுடைய தோழிகள், இறைவனை, 'எனது இனிய தலைவன், எனது வேந்தன், இன்னமுதானவன் என்று எல்லோரும் தனித்தனியே இயம்பினார்கள். இன்ன மும் தூங்குகின்றாயோ? அன்பில்லாத திண்ணிய மனமுடைய அறிவிலார் போலச் சும்மா படுத்திருக் கின்றாயே! துயிலின் சிறப்புத்தான் என்னென்று உரைப்பது', என்று கூறினார்கள். ஆனால் துயிலி னைப் பரிசாகப் பெற்ற அந்த 'சேட்டை' என்ற பெயருடைய பெண் படுத்துக்கிடந்தாள். துயிலின் பரிசினை அவதார புருஷனும் நடித்துக்காட்டுகிறான்.

பதவி, செல்வம் பறிபோன பொழுதும் கூட இராமனுடைய முகம் அன்று அலர்ந்த செந்தாமரைப் பூவின் பொலிவினையும் மிஞ்சி காட்சி அளித்தது. ஆனால் சீதாப் பிராட்டி ராவணனால் தன்னை விட்டுப் பிரிக்கப்பட்டவுடன், 'இலக்ஷ்மணா! இதோ

பார்! வில்லை எடுத்துவிட்டேன். இந்த உலகத்தை யே அழித்து விடுவேன். என்னை யாரும் தடுக்க முடியாது. இதோ உலகம் அழியப் போகிறது' என் றெல்லாம் கோபமும் ஆத்திரமும் பொருமையும் கிளம்பி உணர்ச்சிகளுக்கு ஆளாகி நிதானமிழந்து நடந்து கொண்டு சொல்கிறார்.

மானுடப் பிறவி எடுத்ததற்கேற்ப இறை வனும் விரும்பி துயிலின் பரிசினை ஏற்றுக் கொண்டார் என்கிறார் வால்மீகி

குப்பைகளைக் கிளறித் தனக்கு வேண்டிய உணவை உட்கொள்ளும் கோழிகளைப் போல் நூல் களைக் கற்று அதிலுள்ள சாராம்சத்தைக் கிரகித்துக் கொள்கிறார்கள் ஆன்றோர்கள். அந்த ஆன்றோர் கள் அறியாமையில் துயில்பவர்களை எழுப்பி விழிப் புணர்வடையச் செய்ய முடியும் என்ற கருத்தினை விடிவதற்கு அடையாளமாக கோழி கூவுவதன் மூலம் அறிந்து கொள்ளலாம்', என்கிறார் திருவெம்பாவை எட்டாவது பாடலில் மாணிக்கவாசகர்.

துயிலின் பரிசை நீக்கி விழிப்புணர்வு பெற்ற வர்கள் ஞானம், பக்தி ஆகியவற்றின் மூலம் தன் உணர்வு பெற்று உயர்ந்த மனிதர்களாக வாழ்கிறார் கள் என்ற கருத்தினைப் பறவைகளின் ஒலி எங்கும் கேட்பதன் மூலம் அறிந்து கொள்ளலாம், என்று மேலும் கூறுவார். இறைவனை அடைக்கலமாகக் கொண்ட அடியார்களின் இனிய பேச்சுக்களின் கருத்தைக் கலைஞர்களின் சப்த ஸ்வரங்களையுடைய வாத்தியங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம் என்று கூறுவர் மாணிக்கவாசகர். படிப்பு வேறு; உள் உணர்வு வேறு. படிப்பறிவைச் செம்மையாக்குவது கல்வி. உள்ளுணர்வைச் செம்மையாக்குவது மந்திரம். அதனை ஓதிப் பயிற்சியளிக்கும் மன நலம் உடையவர்களை காலையில் திருக்கோயில்களில்

ஊதப்படும் சங்கொலி மூலம் குறிப்புணர்த்தும் திரு வெம்பாவை எட்டாவது பாசுரம்.

'கோழி சிலம்பச் சிலம்பும் குருகு எங்கும்
எழில் இயம்ப இயம்பும் வெண்சங்கு எங்கும்'

ஆண்டாளும் ஆன்றோர்களாகிய ஞானாசிரியர் களின் கர்ம, ஞான பக்தியினை, 'வந்து எங்கும் கோழி அழைத்தன காண், மாதவிப் பந்தல் மேல் குயிலினங் கள் கூவின காண்,' என்று திருப்பாவை பதினெட்டா வது பாடலில் கூறுகிறார்.

துயிலின் பரிசை (அறியாமையை) நீக்கி ஆன்ம விழிப்படைந்தவர்கள் தெய்வ பக்தியின் மூலம் ஒருமைப்பாட்டுணர்வை வளர்த்து இந்துக்களிடை யேயுள்ள சாதி வேறுபாடுகளை நீக்க வேண்டுவது கடமையாகும் என்பதைப் பாவைப் பாடல்கள் உணர்த்துகின்றன. வேறுபாடுகளை நீக்குவ தாகக் கூறும் கடவுள் பக்தியில்லாத அரசியல்வாதி கள் கண்ணின் பாவைகளில் வரும் பீளையை (அழுக் கினை) அதாவது அறியாமையினால் ஏற்கனவே உண்டான வேறுபாடுகளை மேன்மேலும் வளர்க்கத் தான் செய்கிறார்கள். வளரவிடாமல் தடுக்கப் பாவை விழாக்களில் பங்கெடுக்க வேண்டும்.

'மன்னுயிரெல்லாம் கடவுளின் மக்கள்' என்ற மெய்யறிவினைப் பெறும் பொழுதே வேறுபாடுகளை உள்ளத்திலிருந்து நீக்க முடியும்.

## 6. ஈது என்ன பேர் உறக்கம்.

மெய்ப் பொருள் அல்லாதவைகளை மெய்ப் பொருள் என்று தவறாக உணர்கின்ற மயக்க உணர்வினைக் கொண்டவர்களுடைய உறக்கம் பரிதாபத்திற்குரிய உறக்கமாகும். (உறக்கம் - மன நிலையைக் குறிக்கும்)

மெய்ப் பொருளை மெய்ப் பொருளாக உணர் கின்ற உறக்கம் ஆனந்தத்திற்கு உரிய உறக்க மாகும். (உறக்கம் மௌனத்தைக் குறிக்கும்)

மனித மேம்பாட்டிற்காகச் செயற்கரிய செயல் களைச் செய்து புகழோடு சமுதாயத்தில் தோன்று கின்றவர்களை மக்களெல்லாம் போற்றும் பொழுது மக்களோடு சேர்ந்து கொள்ளாமல் ஒதுங்கியிருக்கும் ஆன்றோர்களுடைய உறக்கம் வியப்பிற்குரிய உறக்கம். அந்த உறக்கத்திலுள்ளவளை எழுப்பும் பொழுது 'இது என்ன பெரிய தூக்கம்? இனியாவது எழுந்திருப்பாயாக', என்று குரல் கொடுக்கிறாள் ஆண்டாள்.

இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்'
(திருப்பாவை 12)

உடைமைகளைப் பறித்து ஏமாற்றி வாழும் அண்டங் காக்கைகள், கொக்குகள் மாளிகையில் உட்கார்ந்து கொண்டிருக்கின்றன. தங்களைத் தாங்களே கருடர் களென்று சொல்லிக் கொண்டிருக்கின்றன. ஆபாச மான குரலையுடைய கழுதையின் பாட்டை, ஆபாசமான உருவத்யையுடைய ஒட்டகம் ரசிப்பதைப் போல் அவர்களே அவர்களுடைய குண நலன்களைப் பாராட்டிக் கொண்டிருக்கின்றார்கள். பீடிகளாக வாழ்ந்து கொண்டு தங்களைத் தாங்களே ஊதுவத்தி களென்று சொல்லிக் கொண்டு திரிகிறார்கள்.

அவர்களைத் திருத்துவதற்கும் அவர்களைப் பாராட்டிக் கொண்டு திரியும் பாமரர்கள் திருந்துவதற்கும் ஆன்மா ஒளிக் கடலில் மூழ்கிக் கிடக்கும் ஆன்றோர்களைத் துயில் எழுப்புகிறாள் ஆண்டாள்.

உலகப் படைப்பிலுள்ள ஒன்பது சக்திகள் தம்முள் முன்னின்ற சக்தி, பின்னின்ற சக்தியைத் துயில் எழுப்புவதாகக் கூறுவார் மாணிக்கவாசகர்.

உடைமைகளைப் பறித்து வாழ்ந்தவர்களிடமிருந்து அந்த உடைமைகளை மீட்டி வாழ்கின்றவர்கள் சமுதாயத்தால் புகழப்படுவதற்குரியவர்கள் ஆவார்கள். அவர்களுடைய பெயரைச் சொல்வது மனத்திற்கு இன்பம் பயக்கும் செயலாகும். அந்தச் செயலில் பங்கேற்காமல் தனித்து ஒதுங்குவது ஆன்றோர்களுடைய, செயல் ஆகாது. 'சுவைமிக்க பொருள் தனியே உண்ணக் கூடாது', என்று சாத்திரம் கூறும்.

'தன் மனைவி சீதாப்பிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணனின் இலங்கைக்குச் சென்றான்; அவனோடு போர் செய்து அவனை வென்றான் இராமன். அவன் எனது மனத்திற்கு இனியவன், அவனுடைய கல்யாண குணங்களைப் பாடினேன். அந்தக் குரலைக் கேட்டு அக்கம்பக்கத்தில் உள்ள எல்லா வீட்டுப் பெண்களும் வந்து விட்டார்கள். வாயைக் கூடத் திறக்காமல் நீ இருக்கிறாயே? இது என்ன பெரிய தூக்கம்! இனியாவது எழுந்திருப்பாயாக', என்று தன்னுடைய தோழியைத் துயில் எழுப்புகிறாள் ஆண்டாள்.

> 'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
> மனத்துக் இனியானைப் பாடவும் நீ வாய்திறவாய்
> இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்
> அனைத்தில்லத்தாரும் அறிந்தே லோ ரெம்பாவாய்.
>
> (திருப்பாவை 12)

உடைமைகளைப் பறித்து வாழ்பவர்களை, ஒடுக்கு பவர்களைப் போற்றுவதில் ஆன்றோர்கள் பங்கேற்க வேண்டுமென்பது ஆண்டாளின் திருவுள்ளமாகும். 'பசுமை தங்கிய கண்களையும் மிடுக்கையும் கோபத் தாற் சிவந்த முகத்தையும் உடையவன் வாலி. அவனை வதைத்தார்; பரந்த காட்டிலுள்ள கபந் தனைக் கொன்றார்; திடமான ஆயுதங்கள் நிறைந்த கைகளையும் உக்ரமான கண்களையும் வலிமையை யும் உடைய விராதனைக் கொன்றார்; இந்த மூவரை யும் கொன்றவனும் வில்லை வளைத்து அம்புகளை விட்ட தேவாதி தேவனுமான ஸ்ரீராமபிரானுடைய திருவடிகளைச் சேருங்கள்', என்கிறார் திருமங்கை ஆழ்வார்.

> 'பைங்கண் விறல் செம்முகத்து வாலி மாளப்
> படர் வனத்துக் கவந்தனொடும் படையார் திண்கை,
> வெங்கண் விறல் விராதனுக விற்குனித்த
> விண்ணவர் கோன் தாளணைவீர் .........'

புலனுணர்வுகளுக்கு அடிமையாகும் பொழுது பிறர் உடைமைகளைப் பறித்து வாழ்வான். பறித்து வாழும் வாழ்வை மேற்கொண்டவர்களை வெறுப்ப வனே, புலனுணர்வுகளுக்கு அடிமையாகாமல் அறி வோடு வாழ்வான். அவன் தான் தன் உடைமையைக் காப்பாற்றும் வலிமையைப் பெறுவான்.

தன் தம்பி சுக்ரீவன் மனைவியைக் கவர்ந்து வாழ்ந்த வாலியைக் கொன்றான் இராமபிரான். தன்னைக் கொல்ல வந்த கபந்தனை அழித்தான். தன்னுடைய மனைவி சீதாப்பிராட்டியைக் கவர்ந்த விராதனைக் கொன்றான்.

வாலி வதம் முதலில் கூறப்பட்டது — சமுதாய உணர்வைக் காட்டும். கபந்த வதம் இரண்டாவ தாகக் கூறப்பட்டது — உடலையும் உள்ளத்தையும் அறிவோடு பேண வேண்டுமென்பதைக் காட்டும்.

தியாகத்தின் மூலம் அறிவுடைய ஆன்மா, ஆன்ம நலன்களை எய்தி சமுதாயத்தைக் காப் பாற்றித் தன்னையும் காப்பாற்றிக் கொள்வான். அவன் தான் அவனது உடைமையையும் காப்பாற்று வான் என்ற அரிய கருத்தினை உணர்த்துவதற்காக திருமங்கையாழ்வார் ராமாயணத்தில் கூறியபடி விராதன், கபந்தன், வாலி ஆகியோரை ராமபிரான் வதம் செய்தான் என்று கூறாமல், வாலி, கபந்தன், விராதன் ஆகியோரை ராமபிரான் வதம் செய்ததாக மாற்றிக் கூறினார்.

'சமுதாய சேவையின் உச்ச நிலையில் வாழ்ந்து மனத்திற்கினியவனான அந்த இராம பிரானைப் பாடும் பொழுது விநயமுள்ள ஆன்ம வித்தையில் கைதேர்ந்த நீ பங்கேற்காமல் படுக்கை யில் கிடப்பது வியப்பிற்குரிய செயல், 'என்ற கருத் தில் தன் தோழியிடம், 'ஈதென்ன பேர் உறக்கம்!' என்று கூறுகிறாள் ஆண்டாள்.

தனக்குச் சமானம் வேறு இல்லாத பரஞ்சோதி இறைவன். அவனுடைய மேலான கருணைக்கு ஒப்பு இல்லை. அவனைப் பற்றியன யாவும் ஒப்பு இல்லாதவை. இவற்றை எல்லாம் சொல்லி நாங் கள் பாடினோம். நீ அவற்றைக் கேட்வில்லையா? நீ வாழ்வாயாக! இவ்வளவு நாங்கள் பேசியும் நீ உறங்குகிறாயே? இது என்ன உறக்கமோ? உன் வாயிலைத் திறவாய், என்று திருவெம்பாவை எட்டா வது பாடல் கூறுகிறது.

'கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங்
கேட்டிலையோ
வாழி யீதென்ன உறக்கமோ வாய் திறவாய்.'

நிழல் உருவத்தைச் சார்ந்திருப்பது போல் மனித மனம் இறைவனைச் சார்ந்திருக்க வேண்டும். அப்பொழுது அவனுடைய ஆன்மாவும் அவன் நிலை அடையும். இறை வழிபாட்டில் நாட்டங்கொள்ளும். 'தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்கு தம்மையேயொக்க அருள் செய்வார்', என்பர் திருமங்கையாழ்வார்.

இறைவனின் நிழல்களாக நடமாடும் அடியார்களுடைய இனிய குரல்களைக் கேட்டும் இன்னும் தூங்குகிறாயே? நீ வாழ்வாயாக என்று தன் தோழியின் விதியினை நினைத்து மற்றோரு தோழி பரிகாசமாகக் கூறுவதாக மாணிக்கவாசகர் கூறுகிறார்.

புல்லாங்குழலாக மாறி ரசிகர்களுக்குத் தன் இசையால் இன்பமளிப்பதும் ஓர் மூங்கில் தான். அடுப்பூதும் குழலாக மாறி புகை மூட்டத்தில் கண்ணீர் விட்டுக் கலங்கிக் கொண்டிருப்பதும் ஓர் மூங்கில் தான்.

மூங்கில்களிடம் எந்த விதமான வேற்றுமைகள் கிடையாது, தகுதிகளும் கிடையாது. அவைகள் சேர்ந்த இடங்களைப் பொறுத்தே தகுதிகளையும் பெருமைகளையும் பெற்றன.

அறிவுடைய ஜீவான்மாக்கள் தங்களது முயற்சியாலும் தகுதியாலும் இறைவனைச் சேர முடியாது. சம்சாரமாகிய பேர் உறக்கத்திலிருந்து விடுபடவும் முடியாது. இறைவன் இவர்கள் மீது விருப்பம் வைத்து அறியாமையால் ஏற்படும் உடற்பற்றினை நீக்கித் தனக்குக் கைங்கர்யம் செய்பவர்களாக இவர்களைக் கையாளும் பொழுது, சம்சாரமாகிய பேர் உறக்கத்திலிருந்து விடுபட முடியும்.

அதற்குச் சங்கீத வித்வானின் கருவியாகப் புல்லாங்குழல் செயல்படுவதைப் போல், இந்த ஜீவான்மாக்கள் இறைவனின் கருவியாகச் செயல்பட வேண்டும். 'படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே', என்று ஸ்ரீ குலசேகராழ்வார் தம்மை ஓர் அறிவற்ற ஆன்மாவாக நினைத்துக் கொண்டு இறைவனுடைய பேரழகை அனுபவிப்பதைப் போல், ஜீவான்மாக்கள் அவனுடைய கல்யாண குணங்களைச் சிந்தனை செய்து கொண்டு அவனது பேர் அழகில் ஈடுபடவேண்டும். இனிய அனுபவங்களும் புனித உணர்வுகளும் தானாக ஏற்படும்.

## 7. உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட் செய்வோம்

உடல் வளர்வதைப் போல் மானுட உள்ளமும் வளர்த்து. அந்த உள்ளத்திலே உண்மை நிலைத்து நின்று, அந்த உண்மையும் இறைவனுடைய திருவடிகளிலே தங்கும் பொழுதுதான், நல்லோர்களுடைய புகழ் கிடைக்கும். அது நிலையான மகிழ்ச்சியினைக் கொடுக்கும். உலகம் முழுவதும் தன்னை அறிய வேண்டுமென்ற துடிப்பினை உண்டாக்கும். அந்தத் துடிப்பு தனது முக்கியத்தை தானே உணரும் படிப்பினை தனக்கு ஏற்படுத்தும். ஏற்படுத்துவதற்காகச் சிறப்பு பொருத்திய தொண்டு செய்யும் உள்ளத்தைத் தன்னை அடைக்கலமாகக் கொண்ட பகவதன்பர்களுக்கு அளிக்கிறான் நாராயணன். அவன் அளித்த அந்த உள்ளமானது, தான் இறங்கிய நோன்பில் நுழைந்து திளைத்து குடைந்து செயல் படுகிறதென்கிறாள் ஆண்டாள்.

> 'நாராயணனே நமக்கே பறைதருவான்
> பாரோர் புகழப் படிந்து...'

அழுக்குள்ள குழந்தையை எடுத்து அதனுடைய அழுக்கைப் போக்கித் தாய் அணைக்கிறாள். அது போல இறைவன் நமது குற்றங்களை நீக்கி அருளுவதோடு நாம் அவனைத் தேடி எங்கும் செல்லாமல் இங்கே நம்முடைய இல்லங்கள் தோறும் அவனே வந்து எழுந்தருளுகிறான். அப்படி எழுந்தருளும் எம்பெருமான் தன்னுடைய சிவந்த தாமரை போன்ற ஒளிபெற்ற பாதங்களைத் தந்தருளுகிறான் என்று கூறுகிறார் மாணிக்கவாசகர்.

> '... ... நந்தம்மைக் கோது ஆட்டி
> இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
> செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை'

இறைவன் தன்னுடைய பொற்பாதங்களை தானாக மனமுவந்து அறிவுடைய ஆன்மாவின் தலையில் வைத்தாலொழிய் இவனுடைய ஆணவம் அழியாது. ஆணவம் அழியும் பொழுது இவன் இறைவனுடைய உடைமை என்பதை உணர் கிறான். உணரும் பொழுது இவனுடைய உலகியல் விருப்பங்களை இறைவன் தான் மாற்றமுடியுமென் பதை உணர்ந்து அவனிடம், 'நீங்காத உறவுடை யவர்களாக இருக்க வேண்டும்; உடைமைகளாகிய நாங்கள் உன்னை மகிழ்விக்க உனக்கே அடிமை செய்வோம்; இதற்கு மாறான எங்கள் விருப்பங்களை மாற்று', என்ற ஆண்டாள் வாக்கினைக் கூறிப் பிரார்த்தனை செய்கிறான்.

'... ... ... உன் தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம்
ஆட்செய்வோம்
மற்றை நங்காமங்கள் மாற்று ... '

ஆண்டாளின் அருள் வாக்கினை, 'ஈசனிடத்தில் பக்தி உடையவர்களே! அவனுக்கு நீங்கள் பழைய அடியார்கள்; ஆதலால் அந்த அன்பினுடைய பாங்கை எல்லாம் நீங்கள் உடையவர்களாக இருக் கிறீர்கள்', என்று துயில் நீங்கி எழுந்த பெண்ணின் குரலில் கூறுகிறார் மாணிக்கவாசகர்.

'பத்து உடையீர், ஈசன் பழ அடியீர், பாங்கு உடையீர்', அறிவுடைய ஆன்மா இறைவனிடம் பக்தி செய்வதால், தான் எக்காலத்திலும் இறை வனுடன் நீங்காத உறவுடையவனாயிருக்கிறான், என்பதை உணர்கிறான். உணர்வதின் மூலம் எல்லா உயிர்களிடமும் உள்ளங்கனிந்த அன்புடையவனாய் இருக்கிறானென்று கூறுகிறார் மாணிக்கவாசகர்.

இறைவனோடு தான் கொண்டுள்ள நீக்கம் இல்லாத உறவை எப்படி உணர்கிறான்? எப் பொழுது உணர்கிறான்?

அறிவுடைய ஆன்மா தன்னைத் தவிர வேறொன்றை அறிவதாயின் தன் குணமாகவுள்ள ஞானத்தினாலேயே அறிய வேண்டும். இந்த ஞானம் தர்ம பூதஜ் ஞானம் எனப்படும். தன்னை மட்டும் அறியும் போது இந்த தர்மபூதஜ் ஞானத்தின் உதவி வேண்டியதில்லை. சூரியனுடைய வெளிச்சம் அவனை விட்டுப் பிரியாமலிருப்பது போல் அறிவுடைய ஆன்மாவின் தர்மபூதஜ் ஞானமும் அவனை விட்டுப் பிரியாமலிருக்கிறது. அவனுடைய குணமாகவே இருக்கிறது. இந்த ஞானம் இறைவனிடமும் அறிவுடைய ஆன்மாவிடமும் விட்டுப் பிரியாமலிருக்கும். அது எப்படி?

அறிவுள்ள, அறிவில்லா உயிரினங்களை உடலாகக் கொண்டு அவற்றுள் ஆத்மாவாகச் செயல்படுகிறான் இறைவன். எனவே தர்மபூதஜ் ஞானம் இறைவனிடமும் அவனை ஆத்மாவாகக் கொண்டுள்ள அறிவுடைய ஆன்மாவிடமும் விட்டுப் பிரியாமலிருக்கிறது. பல்பிற்கு ஒளி கிடையாது. அதில் மின்சாரம் பாயும் பொழுது ஒளி ஏற்படுகிறது. அது போல் தர்மபூதஜ்ஞானத்திற்கு அறிவு கிடையாது. இதனை பக்தி செய்வதின் மூலம் இறைவனிடம் செலுத்தும் பொழுது அறிவுச் சுடர் விட்டுப் பிரகாசிக்கும், இறைவனிடம் செலுத்துவதற்கு தத்துவ அறிவு வேண்டும். தர்மபூதஜ்ஞானம் ஆத்ம சொரூபத்தில் செருகிக் கிடக்கும் பொருளைக் காட்டும் சமயத்தில் தான் இருக்கும். ஆத்மாவிற்கு சுய ஒளியாகயிருந்து பிரகாசிக்கும். நித்யர், முக்தர், இறைவன் ஆகியோர் இடத்தில் இந்த தர்மபூதஜ்ஞானம் எல்லாக் காலங்களிலும் எல்லாப் பொருள்களையும் காட்டிக்கொண்டு இருக்கும். ஆனால் உலகியலின் பந்தங்களில் மூழ்கிக் கிடக்கும் சம்சாரிகளிடத்தில் மிகவும் சுருங்கிக் கிடக்கும். அவரவர்களுடைய கர்மச் செயல்களுக்கேற்ப கர்மாநுகுணமாக விரிந்தும் சுருங்கியும் இருக்கும். இந்த தர்மபூதஜ் ஞானத்தைத் தன்னுடைய

பூர்வ புண்ணியம் பரிபக்குவமான நன்னாளில் ஆசார் யனிடம் கேட்டு அறிந்து, இறைவனிடம் செலுத்தும் பொழுது, அறிவுடைய ஆன்மா தான் இறைவ னோடு கொண்டுள்ள நீக்கமில்லா உறவினை உணர் கிறான்.

உணரும் பொழுது உடலைக் காட்டிலும் தான் வேறுபட்டவனென்றும், எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவனென்றும் அறிவிலே தெளிவடை கிறான்.

பிள்ளைக்கறி சமைத்த சிறுத்தொண்டனாரின் வைராக்கிய உள்ளம், மும்மூர்த்திகளையும் குழந்தை களாககி உபசரித்த அனுசூயையின் அழுக்காறற்ற உள்ளம், துன்பங்களில் இன்பங்கண்ட பிரகலாதனின் தளராத உள்ளம் ஆகிய உள்ளங்கள், தாங்கள் இறை வனோடு கொண்டுள்ள நீக்கமில்லா உறவினை உணர்ந்த உள்ளங்கள். ஆன்மீக போகத்தில் திளைத்த உள்ளங்கள்.

அப்படிப்பட்ட உள்ளங்களைப் பெறப்பற்றற்ற முறையில் கர்மச் செயல்களில் ஈடுபட வேண்டும். ஈடுபடுவதற்குச் செய்யும் காரியத்தின் முக்கியத்தை விடக் காரியம் செய்யும் காலத்தின் முக்கியமே பிர தானம். பருவம் தவறிய மழையும் நிதானம் தவறிய புத்தியும் புகட்டும் பாடம் காலத்தின் அருமையையே.

வெற்றியின் மூலம் கிடைத்த மகிழ்ச்சி ஆர வாரத்தில் சிந்தனை இழந்துவிடக் கூடாது. தங்கள் மார்பைப் பார்க்க 'முடியாத அளவில் ஆணவத்தை வளர்த்துவிடக் கூடாது. அது அவனுக்கு ஏற்பட்ட நல்ல காலமல்ல. தோல்வியின் மூலம் கிடைத்த படிப்பினையில் சிந்தனையைச் செலுத்தித் தங்கள் முதுகைப் பார்க்கும் காலமே அவனுக்கு ஏற்பட்ட நல்ல காலமாகும். அதாவது அவனது உண்மை

யான இயல்பினை அவனே உணரும் காலம் நல்ல காலமாகும். அதுவே ஓதியுணர்ந்து ஓதற்கரியானைச் சிந்திக்கும் காலமாகும். அக்காலத்தை 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாள்' என்றும் 'சிற்றஞ் சிறுகாலே' என்றும் குறிப்பிடுகிறாள் ஆண்டாள். அந்தக்காலத்தில் இறைவனோடு தான் நீக்கமில்லா உறவு கொண்டிருப்பதை அவனருளால் உணர்த்தப் பட்டாள் ஆண்டாள். உணர்த்தப்பட்டவுடன் எல்லா உயிரினங்களில் குடிகொண்டுள்ள இறைவனுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்ற தெளிவான அறி வினைப் பெற்றாள். மக்கள் தொண்டினை மாதவன் தொண்டாகக் கருதிச் செய்ய வேண்டுமென்று தீர் மானித்துச் செயல்படத் தொடங்கினாள்.

இறைவனிடம் பக்தி செய்து அதன் மூலம் தான் பெற்ற அடியார்களை, "வையத்துள் வாழ்வீர் காள்" என்று அழைத்தாள். அவர்களிடம் ஆன்மா உய்வதற்காக நினைத்துச் செய்யும் தொண்டினை மனமுவந்து செய்ய வேண்டுமென்று கூறினாள் ஆண்டாள். எப்படி என்ற வினு எழுப்பப்பட்டது.

பால் கறப்பவர்கள் அஞ்சிப் பின் வாங்காமல் கறக்க உடன்பட்டு நிலையாக இருந்து பாலின் மிகுதியாலே கனத்த முலைகளைக் கைகளால் சேர்த்துத் தொட்டுக் கறக்க தங்களைக் கொடுத்துக் கொண்டு நிற்கும் கொடைத் தன்மையுடைய பருத்த பசுக்கள் குடங்களை நிறைக்கும். அந்த வள்ளல் பெரும் பசுக்களைப் போல் அடியார்கள் சமுதாயத் திற்குத் தொண்டு செய்யவேண்டும்.

வளமான பால் கொடுக்கும் பசுக்கள், தங்களை வளர்த்தவர்களிடம் பெறுவது, அவர்கள் கழித்த பொருள்களான வைக்கோல், கழிவுநீர், பிண்ணுக்கு முதலிய பொருள்கள். வளர்த்தவர்கள் பசுவிடம்

பெறுவது, உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே வளர்க்கும் ஆகாரமான பால்.

அதுபோல் ஆன்மீக உணர்வு உள்ளம் கொண்டவர்களிடம் சமுதாயம் பெறுவது உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே வளர்க்கும் நெடுநோக்கினைக் கொண்ட அறம், பொருள், இன்பம் போன்ற ஊட்டச் சத்துக்கள். அவைகளைக் கொண்டுள்ள கீதையை உபதேசிக்கும் அடியார்களைப்போல் இது வரை வேறுயாரும் எனக்கு மிகவும் இஷ்டமானதைச் செய்ததில்லை. இனியும் செய்யப் போவதில்லை, என்று கூறுகிறான் பகவான் கிருஷ்ணன் (கீதை 18 · 69)

ஓதி உணர்ந்து பிறர்க்கு உரைத்து. தான் அடங்கும் அறிவாளிகள் நீங்காத செல்வம் பெற்றவர்கள். பெறுவதற்குத் தடைசெய்யும் பாசமயக்கத்தினையும் ஆணவ மலத்தினையும் இறைவனே நீக்க வேண்டும் என்ற கருத்தினை மாணிக்கவாசகர், 'இனி நாங்கள் இளைத்துப் போகாமல் எங்களை 'நீ காப்பாற்று ... ', என்று திருவெம்பாவை பதினோராவது பாடலில் பிரார்த்திக்கிறார்.

'உன் தன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம் மற்றை நங் காமங்கள் மாற்று ...' என்று திருப்பாவை இருபத்தொன்பதாவது பாடலில் பிரார்த்திக்கிறாள் ஆண்டாள்.



## நூலாசிரியர்

**A. ஸ்ரீராமுலு தேசிகன்**

- ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து தெற்கே 8 கி. மீ. தூரத்திலுள்ள நாச்சியார்பட்டி
  நா. கி. கோபால்சாமி நடுநிலைப் பள்ளியில் ஆசிரியப் பணி.

  தங்குவது: புதுக்செந்நெல் குளம்.

- ஸ்ரீ வைஷ்ணவ மாநாடுகளில் திருமால் திரு நெறி பரப்பும் தெய்வத் திருப்பணி

- கோதையும் கோவிந்தனும்; கோதை தமிழ் அமுதம்; நாராயணனைப் பாடிய நம் ஆழ்வார்கள்; தசாவதாரத் தத்துவங்கள் ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டது.

- ஸப்தகிரி, விஸ்வ ஹிந்த் பரிஷத் நடத்தும் இந்து மித்திரன், திருக்கோயில், மாத ஜோதிடம், திங்கள் ஜோதிடம், மற்றும் ஸ்ரீ வைஷ்ணவ மாதப் பத்திரிக்கைகளில் ஆன்மீக பக்தி இலக்கியத் தொடர் கட்டுரைகள், ஆய்வுக் கட்டுரைகள் எழுதுவது.

- அவ்வப்போது துண்டுப் பிரசுரங்கள் மூலம் இந்து மதத் தத்துவங்களைப் பரப்புவது.